# ஜப்பானிய ஹைக்கூ 100

குறிப்புரையுடன்




ஈரோடு தமிழன்பன்



அமெரிக்காவில் உள்ள
என் இனிய நண்பர்
புத்தகக் காதலர்
பொள்ளாச்சி
**நா.கணேசன்**
அவர்களுக்கு....



# ஜப்பானிய ஹைக்கூ 100

குறிப்புரையுடன்



ஈரோடு தமிழன்பன்



விழிகள் பதிப்பகம்

8/எம் 139, 7ஆவது குறுக்குத் தெரு
திருவள்ளுவர் நகர்
திருவான்மியூர் விரிவு, சென்னை 41

**ஜப்பானிய ஹைகூ 100**
குறிப்புரையுடன்
ஈரோடு தமிழன்பன்
முதல் பதிப்பு : 2011
பக்கங்கள்: 136
வடிவமைப்பும் மெய்ப்புத்திருத்தமும் :
தி.நடராசன்
அச்சாக்கம்:
பிரிண்டெக் இந்தியா, சென்னை - 5
வெளியீடு:
விழிகள் பதிப்பகம்
8/எம் 139, 7ஆவது குறுக்குத் தெரு
திருவள்ளுவர் நகர்
திருவான்மியூர் விரிவு, சென்னை 41
**விலை: ரூ. 100**

# எதற்கு இந்த நூல்?

இன்று உலகின் பல நாடுகளிலும் பல மொழிகளிலும் எழுதப்படுகிற ஒரு கவிதை வடிவமாகவும் கவிதை வகைமையாகவும் இருப்பது ஜப்பானிய ஹைகூ கவிதை. ஜெர்மன், பிரெஞ்சு, இஸ்பானியம், போர்ச்சுக்கீசு, இத்தாலியம் மற்றும் பல இந்திய, ஆசிய, இலத்தீன் அமெரிக்க மொழிகளில் ஹைகூ தனது இடத்தை நிறுவிக் கொண்டுள்ளது. ஹைகூ, இப்படி உலகம் எங்கும் பரவியிருப்பது அது பிறப்பெடுத்த ஜப்பானிய மொழி மூலமாக அன்று. ஆங்கிலத்தின் மூலமாகவே ஹைகூ எல்லாத் திசைகளையும் எட்டியுள்ளது. 1912இல் நோபல் பரிசு பெற்ற இந்தியக் கவிஞர் இரவீந்தரநாதர் ஜப்பானிய ஹைகூ சிலவற்றை மொழி பெயர்த்ததோடு-தம் தாய்மொழியாகிய வங்காளமொழியில் சில ஹைகூ கவிதைகளைப் படைத்தும் உள்ளார். இவ்வாண்டில் (2011) இலக்கியத்திற்கான நோபல் பரிசைப் பெற்றுள்ள ஸ்வீடன் நாட்டுக் கவிஞர் தாமஸ் திரான்ஸ்ட்ராமர் படைத்துள்ள, 'புரியாப் பெரும்புதிர்' (The Great Enigma) என்ற படைப்பை அண்மையில் படித்தபோது அதில் ஐம்பதுக்கும் மேற்பட்ட ஹைகூ கவிதைகளை நான் கண்டேன். எனவே, உலகப் பெருங்கவிஞர்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கவிதை வடிவம்/வகைமை ஹைகூ என்று நாம் கருதலாம்.

அமெரிக்காவில் மட்டுமே குறைந்தது ஐந்து ஆங்கில இதழ்கள் ஹைகூவுக்கென்று நடத்தப்படுகின்றன. இங்கிலாந்திலும் ஆஸ்திரேலியாவிலும்கூட ஆங்கிலத்தில் ஹைகூ இதழ்கள் நடத்தப்படுகின்றன. ஹைகூவுக்கென்று விளக்க, விமர்சன வரலாற்றுத் தளங்களில் இயங்கிப் பெருமை பெற்ற வில்லியம் ஜெ. ஹிக்கின்சன் (William J. Higginson) அமெரிக்க ஹைகூ கழகம் நடத்தும் 'தவளைக்குட்டை' (Frog pond) இதழில் 1990ஆம் ஆண்டு 'பருவகாலத்து ஹைகூ' என்கிற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதினார். அக்கட்டுரைப் பகுதியில், ஆஸ்திரேலியா, கானடா, மெக்சிகோ, நியூசிலாந்து, ஸ்வீடன், ஐக்கிய அமெரிக்க நாடுகள் என்று உலகத்துப் பல திசைக் கவிஞர்களின் படைப்புகளும் இடம் பெற்றன.

இக்கட்டுரையின் விளைவாக, சான்பிரான்சிஸ்கோவை இடமாகக் கொண்டு இயங்கும் யுகி தெய்கி ஹைகூ கழகம் இப்படிப்பட்ட முயற்சியைத் தொடரலாயிற்று. ஹிகின்சனின் நண்பர் பேராசிரியர் காசுவோ சாட்டோ (Kazuo sato) ஹைகூ கழகம் நடத்திய ஹைகூ இலக்கிய அருங்காட்சியகத்தின் பன்னாட்டுப் பிரிவு நெறியாளராக இருந்தது மட்டுமின்றி, ஜப்பானிலிருந்து வெளிவரும் முக்கியத்துவம் வாய்ந்த ஆங்கிலச் செய்தி நாளேடு ஒன்றில் (Minichi Daily News) ஹைகூவுக்கான ஆங்கிலப் பகுதிக்கும் பொறுப்பேற்றுப் பணியாற்றியுள்ளார். ஹிகின்சன் வெளியிட்ட 'ஹைகூ பருவங்களும் ஹைகூ உலகமும்' என்னும் இணைத் தொகுப்பில், 45 நாடுகளைச் சேர்ந்த 600 கவிஞர்கள் இருபது மொழிகளில் எழுதிய 1150 கவிதைகள் இடம் பெற்றன.

இன்று உலகம் எங்கும் பரவியிருக்கிற-ஜப்பானிய ஹைகூவை-ஜப்பானுக்கு வெளியே கொண்டு சென்றவர்களில் குறிப்பிடத்தகுந்த சிறப்புத் தகுதி வாய்ந்தவர்கள் இருவர். ஒருவர் ஆர்.எச். பிளித்; மற்றொருவர் எரால்டு ஜி.ஆண்டர்சன். இவர்களுள் பிளித் ஜப்பானில் பணியாற்றிய ஆங்கில இலக்கியப் பேராசிரியர். ஜப்பானிய மன்னருக்கும் அக்காலத்தில் ஆசானாக விளங்கியவர். ஆண்டர்சன் கொலம்பியாப் பல்கலைக்கழகத்தில் ஜப்பானியக் கலை ஆய்வுத்துறைப் பேராசிரியர். இருவரும் திறமைசால் மொழி பெயர்ப்பாளர்கள் என்றாலும் - ஹைகூவை ஆங்கிலப்படுத்தும்போது வேறுபாடுகள் இருக்கவே செய்தன. எந்த இரண்டு மொழி பெயர்ப்புகள்தாம் உலகில் ஒன்று போலவே இருந்திருக்கின்றன? இல்லையே! ஆண்டர்சனுக்கு பிளித்தை நன்கு தெரியும். அவர் செய்த ஹைகூ பணிகள் தெரியும். ஜப்பானில் ஒருவரை ஒருவர் கண்டு-பல்வேறு பணிகளில் இணைந்து பணியாற்றியுள்ளனர்.

ஆண்டர்சன் 'மூங்கில் துடைப்பம்' (Bamboo Broom) என்னும் தலைப்பில் ஜப்பானிய ஹைகூ பற்றிய ஒரு சிறு நூலை 1934இல் வெளியிட்டார். ஆங்கிலத்தில் ஹைகூ தோன்றி வளர்வதற்கான சாத்தியம் பற்றி அந்நூலில் ஆண்டர்சன் முன்மொழிவு செய்துள்ளார். எனினும் ஹைகூவுக்கு அன்று காலம் கனியவில்லை. கடந்த நூற்றாண்டு முப்பதுகளில் 1936இல் நியோசென் சென்சகி (Nyogen Sensaki) என்பவரோடு சேர்ந்து ஜென் கற்றுக் கொண்டிருந்த கிளெமண்ட் ஓய்ட் (Clement Hoyt) என்பவரும், ஜப்பானிய மரபில் வந்த அமெரிக்கராகிய கென்னத்

யசுதாவும் (Kenneth Yasuda) (இவர் ஜப்பானிய ஹைகூவை ஆராய்ந்து டோக்கியோ பல்கலைக்கழகத்தின் முனைவர் பட்டம் பெற்றவர்) ஆங்கிலமொழியில் ஹைகூப் படைப்பு முயற்சிகள் செய்தனர்.

'ஹைகூ வடிவம் ஜப்பானிய மொழிக்கே உரிய தனித்துவமான தன்மைகளை உடையது. ஆயின் மொழிகள், நாடுகள் என்னும் எல்லைகள் கடந்து செல்லும் ஆற்றலும், மேற்கத்திய நாடுகளின் கவிதை வடிவங்களோடு சேர்ந்து இடம்பெறும் தகுதிப்பாடும், அதன் விதந்து சொல்லத்தக்க அசாதாரணத்தன்மை என்று நான் உறுதியாக நம்புகிறேன்' என்று ஆண்டர்சன் சொன்னது மிளிரும் மெய்ம்மையாகச் சுடர்விட்டுக் கொண்டிருக்கிறது.

கடந்த நூற்றாண்டு முதற்பகுதியில் இத்தகைய ஹைகூ முயற்சிகள் இருந்தபோதிலும்கூட, ஆங்கிலத்தில், ஹைகூவின் உண்மையான தொடக்கம் கடந்த நூற்றாண்டு ஐம்பதுகளில்தான் ஏற்பட்டது. இரண்டாவது உலகப் போர் முடிவுற்ற நிலையில், அமெரிக்காவுள் ஜப்பானியப் பண்பாடுகளும் மதங்களும் அலையடித்துப் பெருகின.

அமெரிக்கர்களின் ஆன்மிக தாகத்திற்கு ஜப்பானிய ஜென்பவுத்தம் பயன்பட்டது. கலை உணர்வுத் தேட்டத்திற்கு ஜப்பானியக் கவிதைகளும், கலைகளும் சாளரங்கள் திறந்து வைத்தன. ஆலன்வாட்ஸ், தோனால்டு கீனி, டி.டி. சுசுகி, பீட்சுப் பாடகர்கள் மற்றும் பலரும் தங்கள் பங்களிப்பை இக்காலகட்டத்தில் செய்தனர்.

1. ஆர்.எச்.பிளித் மொழிபெயர்த்த ஜப்பானிய ஹைகூ 4 தொகுதிகள். (1949 முதல் 1952 வரையுள்ள காலப்பரப்பில் வெளிவந்தவை).

2. கென்னத் யசுதா எழுதிய 'ஜப்பானிய ஹைகூ' ஆய்வுகள் - 1957.

3. எரால்டு ஜெ. ஆண்டர்சன் எழுதிய 'ஹைகூ ஓர் அறிமுகம்' (1958).

இந்நூல்கள் வெளிவந்த பிறகே, ஆங்கிலத்தில் ஹைகூ படைப்புத் தேவைக்கான அடித்தளம் முதல் முறையாக அமைந்தது என்று சொல்லலாம். ஆயின் மேற்கு நாடுகளைப் பொறுத்தவரை இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்திலேயே பிரெஞ்சு

மொழியில்தான் ஹைகூ முதல் முயற்சி செய்யப்பட்டது. ஜப்பானுக்குச் சென்றிருந்த யூலியன் வொகான்சு, பால் லூயி கஷூடு மற்றும் சிலரும், அங்கிருந்தபோது தம் தாய்மொழியான பிரெஞ்சில் ஹைகூ முயற்சிகள் செய்தனர். அம்முயற்சிகளின் விளைவை 1905ஆம் ஆண்டு நூலாக வெளியிட்டனர்.

அதன்பிறகு மைக்கேல் ரெவான் ஜப்பானிய ஹைகூ கவிதைகளை மொழி பெயர்த்து 1910ஆம் ஆண்டு பாரிசு நகரில் வெளியிட்டார். 1915இல் யூலியன் வொகான்சு "நூறு போர்க்காட்சிகள்" (One hundred vision of war) என்ற ஹைகூ தொகுப்பை வெளியிட்டார். ஆங்கிலத்தில் ஏப்ரல் 1913இல் வெளியான 'கவிதை' இதழில் எஸ்ராபவுண்டின், பிரபலமான 'பாதாளத் தொடர்வண்டி நிலையத்தில்' என்ற கவிதை வெளியானது. இது ஹைகூவா, இல்லையா என்கிற விவாதம் விமர்சன உலகில் சூடுபிடித்தது. பவுண்டைப் பின்பற்றி வாலஸ் ஸ்டீவன்சு, வில்லியம் கார்லோசு, அமிலோவல் என்று படிமவாதிகள் என்று அழைக்கப்பட்ட பலரும் ஜப்பானிய ஹைகூவின் தாக்கத்தில் கவிதை ஆக்கம் தொடர்ந்தனர்.

மெக்சிகோ நாட்டுக் கவிஞரும், அரசுத் தூதருமான ஜோஸ் யுவான் தப்லாடா 1900இல் ஜப்பானுக்குச் சென்றிருந்ததன் விளைவாக-ஹைகூ தாக்கத்திற்கு உள்ளானார். தப்லாடா புனைந்த, ஒரு பிரெஞ்சு மொழிக் கவிதை ஹைகூவைச் சிறப்பான முறையில் அடையாளப்படுத்தியது. இவர்தான் இஸ்பானியக் கவிஞர்களை ஹைகூவின்பால் ஈர்த்தவர் என்று சொல்லலாம்.

ஜெர்மானியத்து முதன்மைக் கவிஞர்களில் ஒருவரான ரில்கே 'ஹைகாய்' முயற்சியை 1920இல் செப்டம்பரில் பிரெஞ்சு மொழியில் செய்து, தோல்வி கண்டார். அதே ஆண்டு டிசம்பரில் அவர் ஜெர்மன் மொழியில் ஹைகூ முயற்சிசெய்து-சொற்களை மிகுதியாகப் பயன்படுத்தியிருந்தபோதும் அவர் ஏறத்தாழ ஜப்பானிய ஹைகூவுக்கு நெருக்கமாக வந்துவிட்ட கவிதையைப் புனைந்தார்.

1929இல் கிரேக்கக் கவிஞன் ஜார்ஜ் செபரிசு-ஹைகாய் அறிமுகம் பெற்று முயன்றிருக்கிறார் என்பதை, அவர் இறந்த பிறகு வெளியிடப்பட்ட அவருடைய நாட்குறிப்புகள் தெரிவிக்கின்றன.

இப்படி உலகெங்கும் பரவிவிட்ட ஹைகூவை, இலக்கிய வரலாறுகளும், தொகை நூல்களும் இனி விலக்கிவிட முடியாது.

இலக்கிய வடிவம்தான் ஹைகூ என்று கருதுகிற சிலர் 'ஹைகூவை எப்படித் தமிழில் எழுத முடியும்? வெண்பாவை ஆங்கிலத்தில் எழுத முடியுமா?' என்று வினவுவர். 2008இல் நான் கோலாலம்பூர் சென்றிருந்தபோது விடுதியொன்றில் நடந்த இலக்கியச் சந்திப்பில் ஈழத்துப் பேராசிரியர் நுஃமான் அவர்களும் என்னிடம் இந்த வினாவை எழுப்பினர். நான் அவருக்குச் சொன்னதைக் கீழே குறிப்பிடுகிறேன்:

"வெண்பா என்பது ஒரு கவிதை வடிவம் மட்டுமே. அது ஒரு கவிதை வகைமையன்று. ஆனால் ஹைகூ முதன்மையாக ஒரு கவிதை வகைமை; அப்புறம் ஒரு கவிதை வடிவமும்தான்! வடிவம் என்ற அளவுமட்டுமே ஹைகூவின் தன்மையாக இருப்பின் அது உலகம் முழுமையும் ஒருபோதும் பரவாது-பரவியிருக்கவும் முடியாது. அது, பின்பற்றத் தூண்டும், கவியுள்ளத்தில் மின்னல் பாய்ச்சும், படிப்பவனை 'ஆகா' என்னும் வியப்புணர்ச்சியுள் ஆழ்த்தும் ஒரு கவிதை வகைமை. படைத்தவனுக்குள் எழுந்த கவிதை-படிப்பவனைச் சேர்ந்து அவனுள் இருக்கும் கவிதையை எழச்செய்து விடும் என்ற செறிவியல் அடுக்குகளைத் தன்பால் கொண்டிருப்பது-ஹைகூ. இன்று ஜப்பானில் இருபது இலக்கத்துக்கும் மேற்பட்ட ஹைகூ கவிஞர்கள் உள்ளனர். செய்தித்தாள்கள் பெரும்பாலானவற்றில் ஹைகூவுக்கு ஒரு பகுதி ஒதுக்கப்படுகிறது. ஏராளமான ஹைகூ கவிதைகள் வெளியீட்டிற்கும் விமர்சனத்திற்கும் வந்து குவிகின்றன. அறிஞர்கள் 17 அசைகள் கொண்ட ஒரு ஹைகூபற்றி ஒரு மணிநேரத்திற்கும் மேலாக நீண்ட விரிவுரை செய்கின்றனர்."

ஹைகூ பொறிக்கப்பட்ட கற்கள் நகரங்களிலும் நாட்டுப் புறங்களிலும் காணப்படுகின்றன. பெரும் படைப்பாளிகள், கடந்த காலத்திலும் நிகழ்காலத்திலும் கவிதை உணர்வுத் தூண்டல் தேடி நெடும்பயணங்களில் வந்து தங்கிய இடங்களிலும், ஹைகூ கல்வெட்டுக்கள் இடம் பெற்றுள்ளன. *ஜப்பானிலிருந்துகூட, ஜப்பானிய ஹைகூ கவிதைகளுக்கென ஆங்கிலத்தில் ஏடுகள் நடத்தப்படுகின்றன. எது ஹைகூ என்பதற்கு எத்தனையோ விளக்கங்கள் சொல்லப்பட்டுவிட்டன; என்றாலும் இன்னும் எந்த விளக்கமும் ஹைகூவை முழுமையாகத் தெரிவித்துவிட்டதாகக் கூறமுடியாது. கருத்துச் சுருக்கப்பெட்டகம்; மின்னல் படப்பிடிப்பு; தந்தி மொழி

* இந்நூலின் முகப்புப் படம் காண்க.

என்றெல்லாம் பளிச்சிடும் நூற்பாத்துளிகள் இருக்கின்றன. ஜார்ஜ் சாம்சன் (1883-1965) 'கவிதைச் சாரத்தின் பொட்டுத்துளிகள்' என்று வரையறுத்ததும், எரால்டு ஆண்டர்சன் (1889-1974) 'தியானங்கள். தொடர் சிந்தனையின் தொடக்கப்புள்ளிகள்' என்று இலக்கணம் கண்டதும், நான்கு தொகுதி ஹைகூ மொழிபெயர்ப்புகள் செய்த ஆர்.எச். பிளித், ஜப்பானிய இலக்கியத்தின் எழுச்சியோ வீழ்ச்சியோ எதுவானாலும் அது ஹைகூவால் முடிவாகிறது என்று சொன்ன வலியுறுத்தல் வாசகமும், மறக்க முடியாதவை.

1968இல் தொடங்கப்பட்ட அமெரிக்க ஹைகூ கழகம், இரண்டு ஆண்டுகள் செலவிட்டும் ஏறத்தாழ 2,00,000 சொற்களால், வல்லுநர்களோடு கடிதத் தொடர்பு கொண்டும், ஹைகூவுக்கான அகராதி வரையறை ஒன்றை எட்டுவதற்கு முயன்றது. ஹைகூ 5, 7, 5 என்ற அசை நிலை வரிசைகளால் உருவாகும், உலகின் மிகச்சிறிய கவிதை வடிவம். ஜேம்ஸ் கிர்கப் (James kirkup) 5, 7, 5 அசைநிலைப் படிவத்திற்கு ஹைகூவிலேயே ஓர் எடுத்துக்காட்டு எழுதினார்.

**கிணற்றுள்**
**சிறிய ஒலியோடு விழும்**
**சிறுசிறு கற்களே ஹைகூ.**

ஹைகூ குறித்து எவ்வளவோ கருத்துக்கள் - அதன் தோற்றம், வடிவம், உள்ளடக்கம், உத்தி, ஜென், இயற்கைச் சார்புகள், வளர்ச்சி, வரலாறு எல்லாம் தமிழில் வெளிவந்துவிட்டன. ஆயினும் முன்பு சுட்டியது போல எல்லாமே சொல்லப்பட்டு முழுமை அடைந்து விட்டது என்று சொல்லமுடியாது. இன்னும் தமிழில் வந்துசேர வேண்டியவை, வண்டிவண்டியாக உள்ளன. அவை எல்லாம் கிடைத்துத் தமிழ்க் கவிஞர்கள் உள்வாங்கிக்கொள்ள நேர்ந்தால்-தலைசிறந்த ஹைகூப் படைப்புகளை நாம் உலகிற்குத் தரமுடியும். பிரெஞ்சு, இஸ்பானியம் ஆகிய மொழிகளில் ஜப்பானிய மூலத்திலிருந்தே மொழிபெயர்ப்பைச் செய்து கொள்கின்றனர். தமிழ்மொழிக் கவிஞர்கள் இப்படி நேரடியாக ஜப்பானியத்திலிருந்தே ஹைகூ தமிழாக்கங்களைப் பெறும் நிலை ஏற்படவேண்டும்.

ஜப்பானில்கூட ஹைகூ இலக்கண வரையறைகள் நெகிழ்ச்சியற்றனவாக இல்லை. ஹைகூ என்ற பெயரை நிலைப்படுத்தியவரும் ஏறத்தாழ 20,000 ஹைகூ கவிதைகளைப் புனைந்தவருமாகிய ஷிகி (1867-1902) 5, 7, 5 என்கிற அசை

அமைப்புகள் அப்படியே இருக்க வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை என்கிற நிலையில், விதிமுறையைத் தளர்த்திப் பதினைந்து முதல் இருபத்தைந்து அசைகள் வரை இருக்கலாம் என்று கூறியுள்ளார். 1994இல் வெளிவந்த வில்லியம் வார்னரின் 'நிறுவனம்சார் ஹைகூ' (Corporate Haiku) என்கிற நூலின் முன்னுரையில் அவர் மேலாண்மையியல் கோட்பாட்டில் இருப்பதுபோல் விதிகள் என்பன உடைக்கப்படுவதற்காக உள்ளவைதாம் என்று சொல்லி-ஹைகூ கட்டுமானத்திற்கு அதைப் பொருத்திக் காட்டுவார்.

உண்மையில் இன்றும் இயற்கைத் தொடர்புடைய, மானுட இயற்கையை இயற்கையோடு தொடர்புறுத்துகிற, ஜென் சாரம் படிந்த, பருவகாலம் குறித்த சொற்குறிப்பை விட்டுவிடாத நுட்பமான ஹைகூ ஜப்பானில் கைவிட்டுவிடப் படவில்லை. ஆயினும் புதுப் பாடுபொருள்கள்-சமூக, அரசியல், பொருளியல்-புறநிலை எதார்த்தங்கள்-ஹைகூவுக்குள் வரத் துடிக்கும்போது கவிஞர்களால் எப்படித் தடுத்து நிறுத்த முடியும்?

சென்ரியு என்னும் மானுட ஹைகூவில் (Human Haiku) மட்டும் இடம் பெறலாம் என்றிருந்த பாடுபொருள்கள், ஹைகூவில் நுழைந்து உரிமையோடு உலாவத் தொடங்கிவிட்டன. ஆங்கிலத்திலும் மைக்கேல் மக்கிலன்டாக், ஹைகூ கவிதைகளில் பாலுணர்வுக் கருத்துக்கள் இடம் பெற்றதை, கார்வன் வான் ஹ்யூவல் தொகுத்த ஆங்கில ஹைகூத் தொகுதி முன்னுரையில் குறிப்பிடுகிறார் (2000). பால் உணர்வு, காதல், மனித மன உணர்வுகளின் முழுப்பரிமாணங்கள், உறவுகள் இன்று ஹைகூவின் பொதுவான கருப்பொருள்களாகிவிட்டதையும் அவர் சுட்டிக்காட்டுகிறார். கானடாவின் முதன்மையான ஹைகூ விமர்சகரும், படைப்பாளியுமான ராட் வில்மாட் (Rod Willmot) இத்தகைய கவிதைகளில் பெரும்பாலானவற்றை 'உளவியல் ஹைகூ' (Psychological Haiku) என்பதோடு-பாலுணர்வு ஹைகூவை, காமவியல் ஹைகூ (Erotic Haiku) என்றே குறிப்பிடுகிறார். அதனை மோசமான சென்ரியு (Serious Senryu) என்று சொல்வதே மிகப் பொருத்தமாக இருக்கும் என்கிறார் ஹ்யூவல்.

தமிழ் ஹைகூ உலகில் இன்னும் வந்து சேரவேண்டிய ஹைகூவுக்கான நுட்பங்கள் ஏராளமாக இருக்கின்றன. ஜப்பானிய ஹைகூ கவிதைகளை ஆங்கிலத்தில் படித்து அதன் உந்துதலால் எழுதப்படும் தமிழ் ஹைகூ கவிதைகளும், தமிழில் எழுதப்படும்

ஹைகூவைப் படித்து, அதன் உந்துதலால் எழுதப்படும் தமிழ் ஹைகூ கவிதைகளும் பல்கிப் பெருகிவிட்டன.

இந்திய மொழிகளிலேயே தமிழ் மொழியில்தான் ஹைகூ கவிஞர்களும் கவிதைகளும் எண்ணிக்கையில் மிகுதி. மரபுக் கவிதையாளர் ஹைகூ கவிதைகளுக்கு ஆதரவு காட்டாமை ஒருபுறம் எனில், புதுக் கவிதைக்காரர்களும் முகம் திருப்பிக் கொண்டது இன்னொரு புறம். இப்படி இருபுற ஊக்குவிப்புகளும் இழந்த நிலையிலும், ஹைகூ தமிழ்க் கவிதை வகைமையில் ஒன்றாகத் தன்னை நிலைநிறுத்திக் கொண்டுவிட்டது. வரலாற்றுப் போக்கில் பார்த்தால் புதுக்கவிதைக்கு முன்னதாக ஹைகூ இங்கு வளர்ந்திருக்க வேண்டும்.

ஏனெனில், ஆங்கிலத்தில் புதுக்கவிதையாளர்களுக்குச் சில உத்திகளை உதவியது-புதுக்கவிதைக்கு முந்தையதான ஹைகூ கவிதைதான். நம்முடைய விமர்சகர்களோ தமிழில் ஹைகூவே இன்னும் எழுதப்படவில்லை; ஹைகூவென்ற பெயரில் எழுதப்பட்டுள்ளவை ஒன்றுகூட ஹைகூவே இல்லை என்று 'தடாலடி' முடிவுகளை எவ்வித இலக்கிய நேர்மையும் இன்றி வெளிப்படுத்தினர். ஹைகூ ஆதரவு விமர்சகர்களோ போதிய புரிதல்கள் இல்லாமல் மேலோட்டமான வகை-தொகை ரசனை மதிப்பீடுகளை விமர்சனம் என்று வைத்து விட்டனர்; இவர்களாவது நமக்குக் கிடைத்தார்களே என்கிற மனநிறைவில் நம் ஹைகூ கவிஞர்களும் கொஞ்சம் மகிழ்ந்து கொள்கின்றனர்.

இந்தச் சூழ்நிலைகளை எல்லாம் மனத்தில் கொண்டுதான் 'ஜப்பானிய ஹைகூ நூறு' என்கிற இந்நூலைச் சில குறிப்புகளோடு நான் வெளியிடுகிறேன். தொல்காப்பியத் திணைக்கோட்பாடு தெரியாமல் நம் சங்கத் தமிழ் இலக்கியங்களை உள்வாங்கிக் கொள்ள இயலாது. அதுபோலவே ஜப்பானிய நிலவியல், சமுதாயவியல், சமயவியல், பண்பாட்டு மரபியல் இவை எல்லாம் தெரியாமல் ஆழமும் நுட்பமும் உள்ள ஜப்பானிய ஹைகூ கவிதைகளைப் புரிந்து கொள்ள இயலாது. ஜப்பானிய ஹைகூ கவிஞர்கள் ஹைகூவில், ஒரு மலையை, ஒரு மலரை, ஒரு உயிரினத்தைக் குறிப்பிடுவதன் பொருண்மை புரியாமல், தமிழில் திருப்பதி என்றும், தாமரை என்றும், தூக்கணாங்குருவி என்றும் மொழிபெயர்த்தால் மிகமிகத் தட்டையான பொருத்தமற்ற ஹைகூவே நமக்குக் கிடைக்கும். ஜப்பானிய மொழி, இலக்கியப் புலமை இல்லாமல் சமூக வரலாற்றுத் தேர்ச்சியில்லாமல், சமய மரபுச் சிந்தனைகள் இல்லாமல் நாம் ஜப்பானிய ஹைகூவைப் புரிந்துகொள்ள முடியாது எனினும், ஆங்கிலத்தில்

வெளிப்பட்டுள்ள நூல்களைத் தேடிப்பிடித்துக் கற்றால் ஓரளவு அக்குறையை ஈடுகட்டிவிட முடியும். எனக்குக் கிடைத்த ஆங்கில நூல்களின் உதவியோடுதான் இந்த நூலை நான் தயாரிக்க முடிந்தது.

ஜப்பானிய மொழியில் முன்னோடிக் கவிஞர்களாகி ஹைகூ சாதனை புரிந்த பாஷோ, பூசன், இசா, ஷிகி ஆகிய நால்வருடைய கவிதைகள் மட்டுமே முழுமையாகவும் சரியாகவும் மொழி பெயர்க்கப்பட்டால், தமிழ் ஹைகூ உலகம் பயன்பெறும் என்ற நிலையில் பரவலான காலப்பரப்பில் எழுந்த ஹைகூ கவிதைகள் நூறு மட்டுமே என் தேர்வுக்கு உரியவாயின.

இவற்றுக்கு நான் உரை தர முற்படவில்லை. ஏனெனில் உரைகள், பெரும்பாலும் கவிதையின் எல்லைகளைச் சுருக்கிவிடும்; படிப்பவனின் உரிமையையும் பறித்துவிடும். சொற்களே 'தம் நாமம் கெட்டு' கவிதையில் கலந்து கரைந்து காணமால் போய்விட வேண்டும். எழுதியவனே கவிதை எழுதியான பிறகு தேவைப்படுவதில்லை; அக்கவிதைகளைப் பொறுத்தவரை இறந்துவிடுகிறான் என்று சொல்லி, விலக்கப்படும் நிலையில் உரையாசிரியன் கவிதைக்குள் வந்து நின்று 'என்னைப் பார்! என் அறிவைப் பார்' என்பானேல் எப்படித் தாங்கிக் கொள்வது? ஹைகூவே 'வார்த்தைகள் அற்ற கவிதை' என்று சொல்லப்படும் நிலையில் அவன் எதைக் கொண்டு உரை செய்வான்?

எனவே என்னுடைய நோக்கம் ஜப்பானிய ஹைகூ இப்படி இப்படி நுட்ப அடுக்குகளைக் கொண்டுள்ளது; புரிந்து கொள்ள ஹைகூ தவிரவும் வேறுசிலவற்றை நாம் படிக்க வேண்டும் என்பதை உணர்த்துவதுதான். அதுமட்டுமன்றி நம் தமிழ் ஹைகூ கவிதைகளை இன்னும் நுட்பம் உடையதாக்க எத்தகைய பார்வை நமக்குத் தேவைப்படுகிறது என்பதையும் எடுத்துக்காட்ட வேண்டும் என்பதுதான். தமிழ் மொழி இலக்கிய வரலாற்றோடு, தமிழ்ச் சமுதாய வரலாறு, பண்பாட்டு மரபு வரலாறுகள் என்பனவற்றையெல்லாம் திரட்டிக் கொண்டு தமிழ் ஹைகூ செய்யப் புகுவது எவ்வளவு பொருத்தமாக இருக்கும்?

எடுத்துக்காட்டாக, வல்வில் ஓரியின் அம்பு, அதியமானுக்குக் கிடைத்த அருநெல்லி, போர்வை பெற்ற மயில், தேர்பெற்ற முல்லை, கண்ணகி உடைத்த சிலம்பு, மாதவி வீணை, மணிமேகலை அமுதசுரபி- -இப்படி எவ்வளவோ தொகுக்க முடியுமே. பொதிகை, பறம்பு-மலைகள்; காவிரி, வைகை நதிகள்; நம் கோடைக் காலம்,

மாரிக்காலம், இளவேனிற்காலம் எல்லாம் நாம் கருதத்தக்கவை அல்லவா? நம் முல்லை, குறிஞ்சி, வாகைப் பூக்கள், வெறும் பூக்கள் மட்டும்தானா? தமிழ் ஹைகூ கவிஞர்கள் சிந்தித்துப் பார்த்தால், ஐந்திணை ஹைகூ உருவாகலாம்.

இன்றைய அறிவியல் தொழில் நுட்பம் எல்லாம் கூடப் பாடுபொருள்களாகக்கூடும். சென்ரியுவில் இன்றைய பொருளாதாரம், சமூகம், அரசியல் எல்லாம் நம் தமிழ்க் கவிஞர்களால் இடம் பெறுவதைப் பார்க்கிறோம். சென்ரியுப் போக்கே ஹைகூவிலும் பெரும் தாக்கத்தை உண்டாக்கிவிட்ட இன்றைய சூழலில், ஹைகூவை நன்கு தமிழில் வளர்த்தெடுக்காமல் விட்டுவிட்டோம். வெள்ளப்பெருக்காய் ஹைகூ பாய்ந்து எங்கும் பரவி வரும் இந்நாளில், கவிஞர்கள் கொஞ்சம் நிதானிக்கலாம் என்பதை நினைவூட்டவே இந்நூல்.

இத்தொகுப்பில் உள்ளவையே, ஆகச்சிறந்த ஹைகூ கவிதைகள் என்று நான் சொல்லமாட்டேன். இன்னும் ஆயிரம், பல்லாயிரம் இருக்கக்கூடும், இருக்கின்றன. பல்வேறு நூல்களிலிருந்து தேர்ந்தெடுத்துள்ள இக்கவிதைகள், தம் அளவில் தலைமையானவை அல்லவெனினும், சில நுட்பக் கூறுகளை உள்ளடக்கிக் கொண்டு, அவ்வாறான முயற்சிகளின் தேவையை உணர்த்துவன.

இத்தொகுப்பில் ஜப்பானிய மரணக் கவிதைகள் (Japanese Death Poems) என்னும் நூலிலிருந்து சில கவிதைகளை மொழி பெயர்த்துத் தந்துள்ளேன். உலகில் பொதுவாக எங்கும் காணப்படுகிற மரபு - இறக்கும் நேரத்தை நெருங்குவதற்குமுன் முறி எழுதி வைத்தல், வில் (will) என்னும் இது தமிழில் உயில் என்று பழகுதமிழாய் வந்துவிட்டது. ஆனால் ஜப்பானில் மட்டும் தான் ஜப்பானியப் பண்பாட்டின் மரபில் மட்டும்தான், இறக்கும் தருவாயில் 'வாழ்க்கைக்கு விடைதரு கவிதை' எழுதுகிற மரபு இருக்கிறது. இக்கவிதைக்கு ஜீசய் (Jisai) என்று பெயர். இத்தகைய விடைபெறு கவிதைகளை, சாமுராய் மறவர்களும், பௌத்தத் துறவிகளும் ஹைகூ கவிஞர்களும் எழுதினர். இம்முத்தரப்பார் மரணக் கவிதைகளின் தொகுப்புதான் நான் பயன்படுத்திய நூல்.

பிறர் மரணத்திற்கு இரங்கல் கவிதை எழுதுகிற பொது மரபிலிருந்து வேறுபட்டு, இறப்பவரே தம் இறப்புக்குக் கவிதை எப்படி எழுதுகிறார் என்பது வியப்பைத் தரும் ஒரு வேறுபட்ட கோணம்தான். 5, 7, 5 என்று அசைகளை மூன்று அடிகளில்

எழுதாமல் ஒரே செங்குத்துக் கோட்டில் ஹைகூவை எழுதவும் முடியும் என்பதனால் படுக்கையில் கிடந்தபடியே ஒரு தூரிகையை மையில் தொட்டு, அதை ஜப்பானியர்கள் எழுதி விடுகிறார்கள். இக்கவிதைகள் ஜப்பானியரின் ஆன்மிக உயிர்வழிக் கொடை, (Spiritual Legacy) என்பதனையே மிகுதியாக எதிரொலிக்கிறது என்கின்றார், இந்நூலின் தொகுப்பாளர் யோயெல் ஓமண் (Yoel Hoffmann) தனது முன்னுரையில்.

மரணத்தைப் பற்றிய நம்பிக்கைகளும் நடைமுறைகளும் குறித்த ஜப்பானிய வாழ்வியல் வியக்கத்தக்கது. இறந்தவர்கள், பறவைகளாய் மற்றும் பல் உயிர்களாய் நம்மைச் சுற்றிலும் உள்ளனர் என்று அவர்கள் நம்புகின்றனர். இறந்த நம் முன்னோர்களைக் காக்கைகளாகக் கருதிப் பிண்டச்சோறு நாம் வைப்பதில்லையா? காக்கையை நான் பிதிரப்பறவை என்று பெயரிட்டே ஒரு கவிதை எழுதியுள்ளேன். இந்நம்பிக்கையின் விளைவு 'உயிர்களிடத்து அன்பு வேண்டும்' என்று பாரதி பாடினானே - அப்படி மனித மனம் விசாலப்படுவதுதான்.

ஜப்பானிய மொழியில் ஒவ்வொரு வகையான மரணத்திற்கும் ஒவ்வொரு பெயர் உண்டு. மரணத்தை, நாம் உயிர் நீத்தார், இயற்கை எய்தினார், இறைவனடி சேர்ந்தார் என்று இப்படிப் பலவாறு குறிப்பிடுகிறோம். மரண வகைகளை அடைமொழி கொடுத்து இயற்கை மரணம், தற்கொலை மரணம், விபத்து மரணம் என்று சொல்கிற மரபுமட்டும் நம்மிடம் உண்டு.

ஜப்பான் மொழியில் ஷி (Shi) என்பது பொதுச் சொல்லாகி மரணத்தை உணர்த்தும். காதல் தற்கொலைக்கு ஷின்யூ (Shinju) என்றும், தன் புரவலனுக்காக மரித்தலை யுன்ஷி (Junshi) என்றும், போரில் உயிர் துறத்தலை சென்ஷி (Senshi) என்றும், மூத்து மரணித்தலை ரோஷி (Roshi) என்றும் குறிப்பிடுகின்றனர். இறைவனைச் சேர்தல் என்னும் பொதுப் பொருண்மையில் மரணத்தைக் குறிக்க, இறந்துபோனவரை புத்தா (Hotoke) என்று சொல்கின்றனர். மரணம் ஒருவரை அறியாமையிலிருந்தும், பொருள் ஆசைகளிலிருந்தும் விடுவித்துத் தூய்மைப்படுத்துகின்றது என்று ஜப்பானியர்கள் கருதுவதாலேயே, இறந்தவரைப் புத்தராகிவிட்டார் என்கின்றனர்.

இறந்தவர்களைக் கருதி உருகும், மரியாதை செய்யும் ஆன்மாக்களின் திருவிழா (Bon Festival) கோடைக் காலத்தின் நடுப்பகுதியில் ஜப்பானில் நடைபெறுவதுண்டு. அது முக்கியமான ஒரு பௌத்த விடுமுறை நாள். கன்பூசிய உணர்வுகளைக் கொண்ட, ஜப்பானிய மதமாகிய ஷிண்டோவின் மூலக்கூறுகள் சிலவற்றை உள்ளடக்கிய விழா அது. இவ்விடுமுறை நாளில் தாங்கள் பிறந்த

ஊர்களுக்குத் திரும்பிச் சென்று குடும்பக் கல்லறைகளுக்குச் சென்று. இறந்துபோன மூத்தோரின் ஆன்மா அமைதிபெறத் தொழுகை நடத்துவார்கள்.

இந்த விழா புத்தாண்டு முதல் நாளில் அமைந்து விட்டால் அதுவும் பகல் இரவு நேரங்கள் சமன்பட்ட நாளில் இறந்தவர்கள் ஆவி, தாம் வாழ்ந்த வீடுகளுக்குத் திரும்பி வருகின்றன என்றும், தம் பரம்பரை எவ்விதம் வாழ்க்கை நடத்துகிறது என்பதைப் பார்க்கின்றன என்றும் ஒரு நம்பிக்கை. வெள்ளரி, நாணல்கள் போன்றவற்றால் குதிரை உருவம் தயாரித்துக் குடும்ப வழிபாட்டு இடத்தில் ஜப்பானியர் வைத்து விடுகின்றனர். குதிரைமீது அமர்ந்து, இறந்தவர்கள் தம் வீடுகளுக்குத் திரும்பி வருவதற்காகத்தான் இந்த ஏற்பாடு. விடுமுறை கழிந்ததும், விளக்குச் சுடர்விடும் மரத்தாலும், காகிதத்தாலும் செய்யப்பட்ட சிறு கப்பல்களை நீரில் விடுகின்றனர். குதிரையில் வந்தவர்கள் கப்பல்களில் தம் இடத்திற்குத் திரும்பிச் செல்வதற்காக, இப்படி மரணம் பற்றிய ஏராளமான நம்பிக்கைகளும் நடைமுறைகளும் உள்ள காரணத்தால் ஜப்பானியப் பண்பாடு என்பதையே (Death Culture) 'ஒரு மரணப் பண்பாடு' என்று ஆய்வாளர்கள் விவரிக்கின்றனர்.

இத்தொகுப்பில் உள்ள ஜப்பானிய மரணக் கவிதைகளைப் படிக்கும்போது இத்தகைய குறிப்புகள் தேவைப்படும். எனவேதான் தேவையான சிறு குறிப்புகளையும் ஹைகூ நுட்பங்களையும் நான் தந்திருக்கிறேன். இப்படி இன்னும் சில நூல்களையேனும் தமிழ் ஹைகூ வளர்ச்சிக்கு உதவி செய்யும் வகையில் எழுதவேண்டும் என்கிற எண்ணமும் எனக்கு இருக்கிறது. பார்ப்போம்.

**ஈரோடு தமிழன்பன்**

# நூறு முத்துக்கள்...
# நூறு முத்தங்கள்...

இன்றைய பதிப்புலகில், படைப்புலகில், விவாதிக்க வேண்டிய வாசிப்புகளில் மொழி பெயர்ப்பும் தவிர்க்க முடியாத ஒன்றாக வளர்ந்து வருகின்றது. அவ்வகையில் இந்நூல் விவாதிக்க வேண்டிய, வளர்ந்து வரும் ஹைகூ கவிஞர்களுக்கு மிக அவசியமான நூலாகக் கருதும் தகுதிப்பாடு உடையது எனலாம்.

செர்ரிப் பூக்கள், பிளம் பூக்கள், கிரிசாந்தமப் பூக்கள், பியோனிப் பூக்கள் - இப்படி, கவிதை களெல்லாம் பூக்களால் நிரம்பி வழிகின்றன. பூக்களைப் பாடாத கவிஞர்களே இல்லை எனலாம். அவ்வளவு பூக்கவிதைகள் - பூங்கவிதைகள். பிற மொழிப் படைப்புகள் தமிழில் மொழி பெயர்க்கப்பட வேண்டும் என்று கூறிய பாரதியின் கனவு நனவாகிறது. ஜப்பான் நாட்டுக் கவிஞர்கள் இயற்றிய ஹைகூ கவிதைகள் தமிழ் வடிவம் பெற்றிருக்கின்றன.

திருடன், வீட்டிலுள்ளவற்றை எல்லாம் திருடிச் சென்று விடுகிறான்; குடும்பமே கவலையில் ஆழ்ந் திருக்கிறது. சாளரம் வழியே வெளியே பார்க்கிறார் ஒரு கவிஞர். நிலா தெரிகிறது. நிலாவைத் திருட வில்லையே என வியந்து கவிதை வடிக்கிறார் ஹைகூ கவிஞர்.

இறப்புக் கவிதை பாடுவதென்பது ஜப்பானிய ஹைகூ கவிஞர்களுக்கே உரிய இயல்பாகக் கருதி, பெரும்பான்மையான கவிஞர்கள் இறப்புக் கவிதை பாடியுள்ளனர்.

நோய், மரங்கள், தொல்மரபுகள், புகை, நீரில் மிதக்கும் நிலா, வானத்தில் சுடர்விடும் நிலா, மலை,

பறவைக் கூட்டங்கள் - இப்படிப் பல்கிப் பெருகும் பாடுபொருளில், நிலவுத் தோட்டத்தில் நட்சத்திரங்களாய்ப் பூத்துக் காய்த்திருக்கின்றன நம் கண்களுக்கு விருந்தாய்.

மேலும், இறந்துவிட்ட தம் முன்னோர்களின் அடக்கத் தலத்திற்குச் சென்று, அவர்களின் ஆன்மாவின் அமைதிக்காக வழிபடுவதைக்கூட ஹைகூ வடிவில் வழங்கியிருக்கின்றனர் ஜப்பானிய ஹைகூ கவிஞர்கள்.

'இரண்டடி'க்குள் உலகளந்த திருவள்ளுவர் போல், பல்வேறு பாடுபொருள்களை மையமாக்கி 'மூவடியால் முறைமை செய்து' மங்காத கவி வெள்ளத்தைப் பாய்ச்சி இருக்கின்றனர் ஜப்பானியக் கவிஞர்கள்.

அக்கவிதைகளையெல்லாம், அழகு தமிழில் பழகு தமிழ்ச் சொற்களால் தமக்கேயுரிய ஆளுமை நடையில் மொழிபெயர்த்து, ஹைகூ மூலவர்களின் வாழ்நாள் அடையாளங்களையும் மேன்மையான வடிவில் வழங்கியிருக்கிறார் கவிஞர் தமிழன்பன் அவர்கள். நூறு கவிதைகளும் நூறு முத்துக்கள் - நூறு முத்தங்கள்.

பிறமொழிகளில் இருக்கும் வகைமைகளைத் தமிழாக்கித் தந்துள்ள கவிஞர் தமிழன்பன் அவர்களை நாம் பாராட்டி மகிழ வேண்டும் என்று கூறி, இந்நூலை எங்கள் பதிப்பகம் வெளியிடுவதற்கு உதவிய கவிஞர் அவர்களுக்கு நன்றி பாராட்டுகிறோம்.

**தி.நடராசன்**
**பதிப்பாளர்**



**1**

## யமாசகி சோகன்

**Yamasaki Sokan** (1464-1552)

O moon! if we
should put a handle to you
what a fan you would be.

**நிலாவே! நாங்கள்**
**உனக்கொரு கைப்பிடி போட்டுவிட்டால்**
**என்ன அழகிய விசிறி நீ!**

மூலத்தில் உள்ள ஜப்பானியச் சொல் Uchiwa தட்டையான வட்டமான விசிறியைக் குறிக்கும்; மடக்கு விசிறியை (Ogi or Sensu) அன்று. இத்தகைய விசிறி சீமாட்டி ஒருத்தியால் 12ஆம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்டது. இக்கவிதை பற்றி ஹைகூ உலகில் பல விமர்சனங்கள் உண்டு. பருவகாலத்தைச் சுட்டும் நிலா இடம் பெற்றிருந்த போதும், அது முழுமையான, குளிர்மயமான பவுர்ணமி நிலாவைச் சுட்டியபோதும், இது மெய்ம்மையான ஒரு ஹைகூ என்று சொல்லத்தக்கதன்று. காரணம், உண்மையான உணர்வை எழுப்பவோ, எடுத்துச் சொல்லவோ முடியாததாக இது இருக்கிறது. இப்படித் திறனாய்வு செய்தவர்கள் இருந்தபோதிலும் 'நிலாவுக்குக் கைப்பிடி போட்டுப் பார்க்கும் கற்பனையில் கிடைக்கிற கவிதை' இன்பத்தை மறுக்கவா முடியும்?

**2**

## அரிகிதா மொரிதகே

## Arkida Moritake (1472-1549)

Green willows
paint eye eyebrows on the face
of the cliff.

**வில்லோ மரங்கள்**
**மலையின் முகத்தில் புருவங்கள்**
**வரைகின்றன.**

ஜப்பானியப் பெண்களிடம், முகத்தில் உள்ள புருவங்களை மழித்துவிட்டு வளைவாக - வண்ணத்தில் தீட்டிக் கொள்ளும் பழக்கம் உண்டு. இந்தக் கவிதை அப்பழக்கத்தை மலையின் முகத்துக்கு மாற்றுகிறது.

நம் நாட்டிலும் நாவிதன், பெண்களின் முகவழகு பேணும் முறையில் தொழிற்பட்டதைப் பெருங்கதையில் வரும் இலாவண காண்டப் பகுதியில் காணலாம். "இலங்கிழை முகத்தையும் மதிமாசு கழீஇய வண்ணம்போலும் கதிர்மேல் இலங்கக் கைவினை முடித்தபின்."

**3**

## மட்சுயி ஷிகியோரி

**Matsue Shigeyori** (1596-1670)

**(ஒனிட்சுராவின் ஆசிரியர்)**

Hey there wait a moment
before you strike the temple bell
at the cherry blossoms.

**ஏய்! யார் அங்கே?**
**கொஞ்சம் பொறு கோயில் மணியை அடிக்கும் முன்!**
**அருகில் செர்ரி மலர்கள்.**

ஜப்பானில் செர்ரி மலர்களின் வாழ்வு - மூன்று நாள்கள் மட்டுமே. கவிஞன் கோயில் மணி அடிக்கப்பட்டால், அதன் அதிர்வுகளால் செர்ரி இதழ்கள் அதற்குள் உதிர்ந்து விடுமே என அஞ்சுகிறான். கோயில் மணியை அடிப்பதற்கு உரியவன் அதை அடிப்பானா? அடிக்காமல் இருந்து செர்ரியின் மூன்று நாள் வாழ்வு முழுமை அடைய உதவுவானா? இப்படி அலைஅலையாய் இம்மூன்று வரிகளில் விளக்கங்களை எழுப்பும் உணர்வுகள்.

## 4

## நிஷியாமா சோயின்
**Nishiyama Soin** (1605-1682)

Life
is lika a butterfly
whatever it is.

வாழ்க்கை
ஒரு பட்டாம்பூச்சிபோல
அது என்னவாயிருந்த போதும்.

இது, சுவாங் சூயைக் (369-289 B.C) குறிப்பது என்பர். அவர் சீனத் தாவோ ஞானி. பட்டாம்பூச்சியாகத் தன்னைக் கனவில் கண்டவர். விழித்தபோது, தன்னை மனிதனாகக் கண்ட பட்டாம்பூச்சியோ தானென்று அதிசயித்தவர் (குழம்பியவர்). வாழ்க்கை ஒரு பட்டாம்பூச்சியாகி விட்டால் அது எத்தகையதாக இருந்தாலும் வண்ணம் உண்டு! அழகுண்டு! பறந்து திரியும் பட்டுச் சிறகுகள் உண்டு! போதாவா? அப்புறம் என்ன? வாழ்க்கை அப்படி இல்லை, இப்படி இல்லை என்ற புலம்பல்?

5

**கிககு**

**Kikaku** (1661-1707)

Oh cuckoo! did you cry to drive away
my mother, who was coming in my dream.

**ஓ! குயிலே கனவில் வந்த**
**என் தாயைத் துரத்தவோ**
**புலம்பி அழுதாய்?**

கிககுவின் தாய், அவருடைய இருபத்தேழாவது வயதில் இறந்துவிட்டார். கனவில் தன் தாயை அடிக்கடி கண்டு வந்தார். ஒரு நாள் விடியலில் வழக்கத்துக்கு மாறாக, தன் தாயை விந்தைமிகு கனவொன்றில் பார்த்துக் கொண்டிருந்த போது ஒரு குயிலின் அழுகை ஒலி அந்தக் கனவைக் கலைத்தது.

## 6

## கிககு

**Kikaku** (1661-1707)

Out enjoying the
evening cool. How good to be
A he, not a she.

**வீட்டுக்கு வெளியே மாலைக் குளிர்ச்சி**
**என்ன நன்மை!**
**ஓர் அவனாக இருப்பது, ஓர் அவளாக இல்லாமல்!**

பழங்காலத்தில் ஜப்பானில் ஆண்களுக்கு ஆடை அணிவதில் அதிகமாக உரிமை இருந்தது - பெண்களுக்கு இருந்ததைவிட! கோடைக் காலத்தில் மாலை நேரத்துக் குளிர்ச்சியை அனுபவிக்க ஆண்கள் விரித்த பாயின் மீது சம்மணம் போட்டுக் குறைந்த உடையோடோ உடையே இல்லாமலோ இரவு நேரம் உட்கார்ந்திருப்பர். பெண்கள் அப்படியிருக்க முடியுமா? நன்றாக உடை உடுத்திக் கண்ணியமாக அமர்ந்திருக்க வேண்டும்.

கிககு தான் ஆணாகப் பிறந்ததற்காகத் தன்னைப் பாராட்டிக் கொள்கிறார்! எவ்வளவு சுதந்தரமாக, எப்படி வேண்டுமானாலும் உட்கார்ந்து மாலைக் குளிர்ச்சியை அனுபவிக்க முடிகிறதே!

7

## இசா
**Issa** (1763-1827)

See that peasant! She plants toward
her crying child.

**அதோ அந்த உழத்தி**
**அழும் தனது குழந்தை இருக்கும்**
**திக்கில் நடுகிறாள் நாற்று.**

ஜப்பானிய மொழியிலேயே மிகச் சிறந்த கவிதை என்று அறிஞர்கள் பலரும் பாராட்டிய ஹைகூ இது.

வயலில் வேலை செய்யும் பெண். வரப்பில் அவள் விட்டிருக்கும் குழந்தை மீதும் கவனம் வைத்துக் கொண்டுதான் வேலையைக் கவனிப்பாள். அதிலும் குழந்தை அழுகிறபோது, அவள் கைகள் இயங்கும் இடத்திலா கண்கள் இருக்கும்? குழந்தையைப் பார்த்துக் கொண்டே நடவு செய்கிறபோது வரிசை மாறிப் போகும்தான். ஆனால் வேலையை நிறுத்திவிட்டு அழும் குழந்தையிடம் ஓடி எடுத்து அழுகையை நிறுத்தவும் முடியாது. என்ன செய்வாள் ஏழைக் கூலியாள்?

## 8

### ஒனிட்சுரா
### Onitsura (1661-1738)

No place
to throw out the bath water
sound of insects.

இடமில்லை எங்கும்
குளித்தபின் வாளிநீரைக் கொட்ட
செவி துளைக்கும் பூச்சிகள் ஓசை.

ஜப்பானில் கோடைக் காலத்தில் மக்கள் வீட்டுக்கு வெளியே தமது தோட்டத்தில் வெந்நீரில் குளிப்பது வழக்கம். இலையுதிர்காலத் துயரக் குறியீடாகிய சில்வண்டுகளின் ஒலியைக் (chirpings) குறிப்பிடும் கவிஞர் போகும் பருவத்தை அனுப்பிவிட்டு வரும் பருவத்தை ஏற்றுக் கொள்கிறார்.

வெப்ப நீர் கொட்டப்பட்டால் சில்வண்டுகள், பூச்சிகளின் பாட்டு நின்று போகலாம். பூச்சிகள் மடிந்தும் போகலாம் என்ற கருணை கசிகிறது. வாடிய பயிர் கண்டு வாடிய வடலூராரர்க்கு முந்தியவர் ஒனிட்சுரா.

ஒனிட்சுராவின் இந்தக் கவிதையின் தாக்கத்தால் எதிரொலியாகக் கவிதைகள் எழுந்தன. ஒரு கவிதை. இலக்கிய உலகில் பரவிப் புகழ் பெற்றது.

'ஒனிட்சுரா
இரவெல்லாம் நடந்து கொண்டிருந்தார்
கையில் ஒரு வாளியோடு.'

## 9

## சிய்யோ-நி
**Chiyo-Ni** (1703-1775)

I wonder in what fields to day
He chases dragon flies in play
My little boy who ran away

**என்னைப் பிரிந்து போன என் குட்டிப்பையன்**
**எந்தக் காட்டில் – விளையாட்டில்**
**தும்பிகள் துரத்திக் கொண்டிருக்கிறானோ?**

ஜப்பானியச் சிறுவர்கள் தும்பிகளைப் பிடித்துப் பசைபோட்ட மூங்கில் குச்சியில் ஒட்டவைத்துத் தூண்டில் போலப் பிடித்துக் கொண்டு விளையாடுவார்கள்.

ஜப்பானிய இலக்கியத்தில் உள்ளத்தை வெகுவாக உருக்கிவிடும் கவிதைகளில் இதுவும் ஒன்று. சிய்யோ-நி என்ற பெண் கவிஞர், 19ஆவது வயதில் திருமணம் நடந்து 27ஆவது வயதில் கணவனை இழந்தவர். அவருடைய ஒரே ஒரு குழந்தையும் தன் ஒன்பதாவது வயதில் இறந்துவிட்டான். கணவனை இழந்த அடுத்த ஆண்டிலேயே இத்துயரம்.

**10**

## சிய்யோ-நீ

**Chiyo-Ni** (1703-1775)

A morning glory having taken
The well-bucket, i begged for water

**கிணற்று வாளி**
**பற்றிக் கிடக்கும் 'காலைக் கீர்த்தி'**
**தண்ணீர் யாசகம் கேட்டேன் நான்.**

ஒருநாள் காலையில் இக்கவிஞர் தன் வீட்டுக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்கப் போனபோது, அதற்குப் பயன்படும் வாளியைச் சுற்றிப் பற்றிக் கிடந்தது 'காலைக்கீர்த்தி' என்ற பெயருடைய கொடி. அதனைப் பிரிக்க முடியாததால் (பிரிக்க விரும்பாததாலும்தான்) பக்கத்து வீட்டாரிடம் தண்ணீர் யாசகம் கேட்க வேண்டியதாயிற்று.

இக்கவிதை பழங்காலம் முதல் இதன் ஆசிரியர் பெயரோடு அடையாளப்படுத்தியே பேசப்பட்டு வந்தது. இது நிச்சயமாகப் பாராட்டப்பட வேண்டிய கவிதைதான். ஆயின் நவீன கவிஞர்கள், சிய்யோ-நி ஓர் அற்புதச் சுவைப் பாவனையில் இதைப் படைத்து விட்டதாக விமர்சனம் செய்கிறார்கள் என்கிறார் அஸ்தாரூரா மியாமூரி.

**11**

## பாஷோ

**Basho** (1644-1691)

Banana leaves hanging
round my hut
must be moon - viewing

வாழை இலைகள்
என் குடிலைச் சுற்றித் தொங்கியபடி
நிலாப் பார்த்துக் கொண்டுதான் இருக்கும்.

பாஷோ என்ற பெயரே வாழையைக் குறிப்பதுதான். இந்தப் பெயர் அவருக்கு மிகவும் பிடித்த பெயர். அவர் இயற்பெயர் மாட்சுவோ கின்காகு என்பது. வாழை, வாழ்விலும் கலையிலும் அவர் தேடிய ஒளியைக் குறிப்பால் உணர்த்தக் கூடியதாக அவருக்கு இருந்தது. கோடைக் காலத்தில் அதன் நிழலை அனுபவிப்பவர் பாஷோ. எங்குக் குடியிருக்க நேரிட்டாலும் அங்கு பாஷோவுக்கு வாழை மரம் இருக்க வேண்டும். அவருடைய மாணவர்கள் அதைக் குறிப்பறிந்து நிறைவேற்றிவிடுவர். தமது குடிலைவிட்டுப் புறப்பட்டு வேறு எங்கே போக நேர்ந்தாலும் அவர் உள்ளம் வாழை மரத்தை ஒருபோதும் மறந்ததில்லை, வீட்டில் விட்டுவிட்டு வந்த தனது குழந்தையின் நினைவாகவே ஒரு தாய் இருப்பதுபோல. அவர் வாழையோடு வாழ்ந்தவர். எங்கோ புறப்பட்டுப் போன இடத்தில் நிலாவைப் பார்க்கிறார் பாஷோ. சட்டென்று அவர் மனத்தில் தோன்றுகிறது. "நம் குடில் வாழை மரத்து இலைகள் இப்போது கட்டாயம் நிலாப் பார்த்துக் கொண்டுதானிருக்கும்" என்று நினைத்துக் கொள்கிறார்.

தாவரங்களில் ஏனையவற்றின் இலைகளைவிடத் தனது இலைகளே பெரியவை என்று வாழை மரம் நினைத்துக் கொண்டால் எப்படியிருக்கும்? அப்படித் தன்னைப் பற்றியும் தன் கவிதைகள் பற்றியும் பாஷோ ஒரு கருத்து வைத்திருந்தார் என்ற விமர்சனமும் உண்டு.

**12**

## பாஷோ

**Basho** (1644-1691)

old legs, still eager
for yoshino's
flowering slopes.

**கிழடு தட்டிய கால்கள்-எனினும்**
**இன்னும் ஆசை யோஷினோவின்**
**பூத்துக் குலுங்கும் சரிவுகள் பார்க்க.**

பயணம் போவது. இயற்கையின் மடியிலும், பிடியிலும் கிடந்து அனுபவிப்பது, கவித்துவப் புத்துணர்வு கொள்வது என்று ஜப்பானியக் கவிஞர்களிடையே வாழ்க்கை மரபுகள் உண்டு. கவிதை எழுதக் கருப்பொருள் தேடியும், படிமங்கள் தேடியும்போகும் கவிதைப் பயணத்துக்கு (Poetic outings) கின்கோ (ginko) என்பது ஜப்பானியப் பெயர்.

நிலாப் பார்ப்பதுபோல - மரங்கள் பார்ப்பது - மலர்கள் பார்ப்பது - மின்மினிகள் பார்ப்பது - எல்லாமே ஜப்பானியர்களுக்குத் திருவிழாக்கள்.

ஜப்பானில் யோசினோ மலை - செர்ரி மரங்கள் பார்க்க விரும்புபவர்களுக்குக் கொண்டாட்டமான இடம். அங்கு ஏறத்தாழ ஓர் இலக்கம் மரங்கள். அவற்றில் பெரும்பாலானவை வெண் செர்ரி மரங்கள்.

## 13

## பாஷோ

**Basho** (1644-1691)

Visiting tombs is
white hairs bow
over canes.

**கல்லறைகளுக்கு வந்து**
**நரை முடியர்கள் தலைசாய்ப்பர்**
**கைத்தடிகள் மேல் கவிந்து.**

பான் திருவிழா அதாவது ஆன்மாக்களின் திருவிழா முதல் நாளன்று (13-15.யூலை) குடும்பத்தார் அடக்கம் செய்யப்பட்ட கல்லறைக்குப் பெளத்தர்கள் செல்வது வழக்கம். அவர்களைக் கல்லறைகளிலிருந்து தத்தம் வீடுகளுக்குத் திரும்புமாறு அப்போது அழைப்பார்கள். இந்தக் கவிதையில், கல்லறைக் காட்டுக்குச் செல்லும் காலத்தை நெருங்கியவர்கள் அங்குச் செல்வதும், கைத்தடியை ஊன்றி, அதன்மீது தலைகவிந்து தமது உறவினர் கல்லறையைப் பார்த்து நிற்பதும் எனக் கல்லறைக் காட்சி உயிர் பெறுகிறது.

**14**

## ஒனிட்சுரா
## Onitsura (1660-1738)

Ah! he is not a common man
who turns to a flowerless tree

**ஆ! அவன் என்ன**
**சாதாரண ஆளா**
**பூக்காத மரத்தைத் தேடிப் போக!**

தனக்கு ஆசிரியனாக இருந்து பாடம் சொல்ல வேண்டும் என்று கேட்ட ஒருவருக்காக, ஒனிட்சுரா எழுதியது இந்த ஹைகூ. இதில் தனது பெருமையையும் ஒனிட்சுரா சொல்லிக் கொள்கிறார். 'அறிவு மலர்கள் பூத்துக் குலுங்கும் ஞானத்தரு' என்று தன்னைப் புகழ்ந்து கொள்கிறார். அறிவுத்திறம் இல்லாத ஒருவனுக்குத் தனது அருமை தெரியாது என்று கூறித் தன்னிடம் பாடம் கேட்க விரும்புபவனையும் உயர்த்தி விடுகிறார். மாணவனாக வரப் போகிறவனைப் புகழ்ந்து, தன்னை உயர்த்திக் கொள்ளும் திறமை பளிச்சிடுகிறது.

**15**

## ஒனிட்சுரா

**Onitsura** (1660-1738)

The people view the cherry - bloom
their skeletons wrapt in silks

**செர்ரி பூப்பதைப்**
**பார்க்கும் மக்கள்**
**பட்டு மூடிய எலும்புக் கூடுகள்.**

ஜப்பானில் செர்ரி மலரும் பருவத்தில் எல்லா மக்களுக்கும் கொண்டாட்டம்தான். ஏழை, பணக்காரன், மேல்தட்டு, கீழ்த்தட்டு, இளையவர், முதியவர் யாவருமே தம்மிடம் உள்ள சிறந்த உடைகளை அணிந்து கொண்டு செர்ரி பார்க்கப் புறப்பட்டு விடுவர். செர்ரி மலர்களை அப்படிப் பார்ப்பவர்கள் எல்லோருமே செல்வ வளம் படைத்தவர்கள் என்பது பொருள் இல்லை. வறுமையில் எலும்புக் கூடானவர்களாலும் செர்ரி மலர்கள் பூத்துக் குலுங்குவதைப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. இன்னும் கொஞ்ச காலத்தில் முடிவிடம் தேடிப் போய்விடும் தள்ளாமை உடையவர்களும், தமக்கு எந்த நேரத்திலும் எதுவும் நேரலாம் என்றிருக்கும் நிலையில் உள்ளவர்களும், தம்மிடம் உள்ள பழையதோ - கிழிந்ததோ - எப்படிப்பட்டதாயினும் சரி என்று பட்டுச் சொக்காய், வீட்டில் தேடிப்பிடித்து உடுத்திக்கொண்டு போகின்றனர். ஓர் இரக்க உணர்வு இங்கு வெளிப்படுகிறது. ஆனால் இந்தச் செர்ரி மலர் இருக்கிறதே இது மூன்று நாள் மட்டுமே வாழ்ந்து முடிந்து போகிற நிலையிலும், நிலையாகத் தன் அழகை - கவிதையிலும் மக்கள் கண்களிலும் நிறுத்திவிட்டுப் போகும் விந்தைமிகு உண்மையை வெளிப்படுத்தி மனித மன நரம்புகளிலும் நிலையின்மையிடையே நிலைபெறலைத் தேடவேண்டும் என்னும் எண்ண அலைகளை எழுப்பிவிடுகிறது.

## 16

### பாஷோ

**Basho** (1644-1691)

On a withered bough
a crow alone is perching
autumn evening now.

**உலர்ந்த ஒரு கிளையில்**
**ஒரு காகம் மட்டுமே தன்னந்தனியாய்**
**இலையுதிர்கால அந்தி இது.**

இது பாஷோ (1681) முதன்முதலாக எழுதிய அவருடைய தலைசிறந்த ஹைகூ. ஆங்கில இலக்கியத்திலும் தாக்கத்தை ஏற்படுத்திப் படிமவாதிகள் கவனத்தில் இடம் பிடித்தது. குறிப்பாக, எஸ்ராபவுண்டின் 'ஒரு பாதாளத் தொடர் வண்டி நிலையத்தில்' என்ற கவிதையிலும் (1914), 1917இல் வாலஸ் ஸ்டீவன்ஸ் எழுதிய 'ஒரு காக்கையைப் பார்க்கப் பதின்மூன்று வகைகள்' என்ற கவிதையிலும் பாஷோ கவிதையின் தாக்கம் இருப்பதை ஆய்வாளர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர்.

இந்தக் கவிதைக்காக பாஷோ மூன்று ஓவியங்கள் வரைந்தார். முதலில் வரைந்த படத்தில் ஏழு காக்கைகள் கிளையில் அமர்ந்திருக்க, இருபது காக்கைகள் விண்ணில் பறந்து கொண்டிருக்கின்றன. பிறகு, வரைந்த இரண்டு ஓவியங்களில் ஒன்றில், ஒரே ஒரு காக்கை, இலைகளற்ற கிளையில் அமர்ந்திருக்கின்றது; மற்றொன்றில் சிறகடித்துக் கொண்டிருக்கிறது.

## 17

### பூசன்
**Buson** (1713-1783)

On the great temple bell
stopped from flight and sleeping
the small butterfly.

**கோயிலின் பெரிய மணி மீது**
**தூங்கிக் கொண்டிருக்கும் பறப்பதை விட்டுவிட்டு**
**சிறிய பட்டாம்பூச்சி.**

மிக நுட்பமான ஹைகூ. கோயில் மணி அதுவும் ஊரெங்கும் பரவும் ஓசையை எழுப்பும் மிகப் பெரிய மணி அடிக்கப்பட்டால் அந்தச் சிறிய பட்டாம்பூச்சி என்ன ஆகும்? ஆன்ம விடுதலையைத் தேடி வருபவர்க்குரிய கோயிலில் - ஒளி விழிப்புக்குரிய கோயிலில் - சின்னஞ்சிறு பட்டாம்பூச்சி உறங்கிக் கொண்டிருக்கிறது. வாழ்க்கை என்றால் என்ன என்று புரியாத அந்தச் சின்னஞ்சிறு பட்டாம்பூச்சி - வெறும் பட்டாம்பூச்சி மட்டும்தானா? அது விழிப்பதற்கும் பெரிய மணி அடிக்கப்பட வேண்டுமா? ஒலி எழுப்பும் மணி மீதே என்ன உறக்கம்? அலை அலையாய் எண்ணங்களும் உணர்வுகளும் பெருகிக் கொண்டே போகின்றன.

அமிலோவல் (1874-1925) என்னும் படிமக் கவிஞர் அமைதி என்கிற தலைப்பில் எழுதியுள்ள கவிதையை ஒப்பிடுகிற ஆய்வாளர்கள், பூசனின் தாக்கத்தை அமிலோவலிடம் காண்கிறார்கள்.

Perched upon the muzzle of a cannon
A yellow butterfly is slowly opening and
shutting its wings.

## 18

### இகாரா சாய்கது
**Ihara Saikaku** (1642-1693)

Is my mind elsewhere
or has it simply not sung
hototo gisu.

என்மனம் என்னிடம் இல்லையா?
இல்லை பாடத்தான் இல்லையா
குயில்?

சாய்கது பதினான்கு வயதில் 'சாயின்' என்பவரிடம் மாணவரானார். ஜப்பானில் புனைகதைக்கும் துப்பறியும் கதைகளுக்கும் முன்னோடி இவர். ஹைகூ ஆசானாகவும் இருந்தவர். ஒருமுறை 24 மணி நேரத்தில் 23,500 கவிதைகளைக் கொட்டித் தள்ளிய ஜப்பானியக் காளமேகம் இவர்.

**19**

## கிககு

**Kikaku** (1661-1707)

Oh beautiful peonis! for love of which
Even kusunoki took of his armour

**அழகுப் பியோனிகள்! அவற்றின் காதலில்**
**குசநோகிகூட அகற்றிவிட்டான்**
**அணிந்திருந்த ஆயுதங்களை.**

குவாச்சி மாநிலத்தில் ஹின்னூஉ என்னும் இடத்தில் குவான்ஷின்ஜி கோயில் அங்கிருக்கும் பியோனி மலர்ச் செடிகளால் புகழ்பெற்றது. குசநோகி என்ற படைத் தளபதிக்குக் குடும்பக் கோயில் அது. அவர் மினடோகவாப் போரில் தன்னைத்தான் மாய்த்து வீரமரணம் (Harukiri) அடைந்தார். அவருடைய தலை இந்தக் கோயில் வளாகத்தில் புதைக்கப்பட்டது.

தளபதி குசனோக்கி இரவு பகல் எப்போதும் தனது தலைவனுக்காகப் போர் செய்வதிலேயே ஈடுபட்டு இருப்பவர். அப்படிப்பட்ட இரும்பு இதயம் படைத்த வீரத் தளபதி நெஞ்சையும் ஈரப்படுத்தி இளகச் செய்துவிடும் பியோனி மலர். அதனால் அப்பூக்கள் மேல் கொண்ட பேரன்பால் தரித்திருக்கும் ஆயுதங்களை அகற்றிவிட்டு அப்பூக்களை நெருங்குவான் என்பர்.

ஜப்பானியப் பூக்களிலே மிகமிக அழகானது செர்ரிமலர்தான் என்பது உண்மை. ஆனால் அளவில், வண்ணச் செழிப்பில் அந்தப் பூவும் பியோனிக்கு நிகராக முடியாது. சிவப்பு, வெண்மை, கருஞ்சிவப்பு ஆகிய வண்ணங்களில் நான்கு அல்லது ஐந்து அங்குலச் சுற்றளவு கொண்டு பூத்துக் குலுங்கும் பியோனி.

**20**

## சிய்யோ-நி

**Chiyo-Ni** (1703-1775)

The butterfly
what are the dreams that make him
flutter his wings.

**பட்டாம்பூச்சி...**
**என்ன கனவுகள் அதனைச்**
**சிறகடிக்கச் செய்கின்றன.**

இதில் வரும் பட்டாம்பூச்சியும் - சுவாங்சூவைக் குறிப்பதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

ஹைகூவில் பட்டாம்பூச்சி பெறுகிற இடம் நமக்கு வியப்பை அளிக்கிறது.

swallow tail - ageha

monorch - madara

skipper - sesercho - பட்டாம்பூச்சிகளின் வடிவத்தை ஒட்டிய பெயர்கள் இவை.

Cabbage, shirochs, pieris - என்ற வகைகளும் உண்டு.

கோடைக்காலப் பட்டாம்பூச்சி, இலையுதிர்காலப் பட்டாம்பூச்சி, மாரிக்காலப் பட்டாம்பூச்சி என்று பருவகாலங்களுக்கு ஏற்பப் பட்டாம் பூச்சிகள், ஜப்பானில்.

**21**

## ஹோகுஷி

**Hokushi**

(குறிப்புகள் கிடைக்கவில்லை)

I have sold my paddy fields and now
the singing frogs kept me awake.

**என் நெல் வயல்களை விற்றுவிட்டேன்**
**இப்போது தூங்காமல் கிடக்கிறேன்**
**பாடும் அத்தவளைகளால்.**

தவளை ஜப்பானியருக்குப் பிடித்தமானது. அதன் குரலில் அவர்களுக்கு அப்படி ஓர் இனிமை. கவிஞர் ஹோகுஷிக்குத் தூக்கம் வருவதே. அவர் வயலில் இருந்து பாடிய தவளைகளால்தான். இப்போது வயலை விற்றாயிற்று. தூக்கமும் போயாயிற்று. மண்மீதும் மண்ணில் வாழும் உயிரினங்கள் மீதும் அளப்பரிய விருப்பம் ஜப்பானியர்க்கு. வயல் கை, நழுவிப் போன துயரத்தை விடக் கவிஞனுக்குத் தான் தூங்கத் தாலாட்டிய தாய்மைத் தவளைகளை இழந்த துயரமே பெரிதாக இருக்கிறது. வயலின் வளம் பற்றி செழித்து வளர்ந்த பயிர்கள் பற்றி எல்லாம் பாடாமல் தவளைப் பாட்டைப் பற்றி மட்டுமே பாடுகிறார். இவர் ஹைகூ முன்னோடியான பாஷோவின் மாணவர். 1718இல் இறந்தார்.

22

## சுயீயு-யோ

**Suiu Jo** (1766-1846)

Unaware it may be of departing spring
the butterfly is sleeping on the grass.

**வசந்தம் பிரிவது தெரியாமல்தான்
ஒருவேளை உறங்கிக்கொண்டிருக்கலாம்
புல்லின்மீது பட்டாம்பூச்சி.**

விருப்பத்திற்கு உரிய ஒன்றைப் பிரிய மனித மனம் விரும்புவதில்லை. பிரிவு நேரக்கூடும் என்று தெரிந்தாலும், நேரப்போவது இப்போதில்லை, பிறகு என்று தெரிந்தாலும் உறக்கம் கெட்டு விடுகிறது. உறக்கம், விழிப்பு என்பது போலத்தான், இன்பம் துன்பம், ஏற்றம், இறக்கம், கண்ணீர், புன்னகை, பிறப்பு, இறப்பு என்றெல்லாம் பகுப்புண்டு. மனித மனம் சமன்பட்டு இருக்க முடிவதில்லை. வசந்தம் பிரிகிறது என்றால் என்ன? அதன் கடைசி நொடி வரை அது வசந்தம்தானே. இப்போது விழித்துக் கொண்டு போகிறதே! போகிறதே! வசந்தம் என்று ஏன் புலம்ப வேண்டும்? பட்டாம்பூச்சி நிம்மதியாக உறங்குகிறது. கவிஞன்தான் ஐயோ பாவம், அதற்குத் தெரியவில்லையே என்று வேதனைப் படுகிறான்.

**23**

## ஹரிட்சு

**Haritsu** (1662-1747)

Among the flower-viewing folk
I have seen many fit to be my wife.

**மலர்பார்க்கும் மக்கள் கூட்டம்**
**பார்த்தேன்; பலர்**
**மனைவியாகத் தக்கவர் எனக்கு.**

செர்ரி பூத்துக் குலுங்கும் பருவம் ஒரு திருவிழாக் காலம். புத்துடையும் புன்னகையுமாய் மக்கள் அதற்காகத் திரள்வார்கள். எல்லோருமே மலர் பார்க்கத்தானா வருகின்றனர்? ஹரிட்சு போல மலர் பார்க்க வந்து மங்கையரைப் பார்த்து மனத்தைப் பறிகொடுப்பவர்களும் இருப்பார்கள். மனைவியாகத் தகுந்தவர்களாக - அந்தக் கூட்டத்தில் பலரைக் கண்டவர் என்ன செய்வார்? அடுத்த கவிதையில் இவருடைய குருநாதரும் நிலாப் பார்க்கிறார். எப்படியென்று பாருங்கள்.

ஹரிட்சு, பாஷோவின் மாணவர்.

## 24

## பாஷோ
**Basho** (1644-1691)

No pretty face is to be seen
Among the group viewing the moon.

**அழகாய் ஒருமுகம்**
**தென்படவில்லை**
**நிலாப் பார்க்கும் குழுவில்.**

முன்பு பார்த்த நிலாப் பாட்டோடு அதை எழுதியவரின் ஆசான் எழுதியுள்ள இதனை ஒப்பிட்டுப் பார்க்கலாம். குருவும் சீடனும் ஒத்த நோக்கத்தோடுதான் நிலாப் பார்க்கப் போயிருப்பதாக நமக்கு இக்கவிதைகள் சொல்கின்றன.

எவ்வித முன்திட்டமுமின்றித் திடுமெனப் புனையப்பட்ட இக்கவிதை நிலாப் பார்க்கும் ஒரு குழுவைப் பற்றிப் பேசுகிறது. தனக்கு மனைவியாகத் தக்க மங்கையர் பலரைக் கண்டு சீடன் ஹரிட்சு மனம் இழந்து, நிலாப் பார்த்தலைக் கைவிட்டதைப்போல, குரு பாஷோ நடந்து கொள்ளவில்லை. குழுவைக் குருவும் பார்க்காமல் இல்லை. ஆனால் அதில் ஒரு முகம்கூட நிலாவுக்கு நிகராகாது என்று கண்ணையும் கவனத்தையும் நிலாமீதே திருப்புகிறார். இக்கவிதையில், ஓர் அழகு; நிலாவைப் பற்றிப் புகழ்ச்சியாக ஒரு சொல்கூட இல்லை. ஆனால் அதற்காகவேதான் எழுதப்பட்டிருக்கிறது.

25

**இசா**

**Issa (1763-1827)**

Cherries at Eta temple coweringly blossom.

**இதாக் கோயிலில்**
**கூனிக் குறுகிப் பூக்கும்**
**செர்ரி மலர்கள்.**

இதா என்னும் இடத்தில், ஜப்பானின் தீண்டத்தகாதவர்கள் வாழ்கின்றனர். கசாப்புக் கடைகளில் வேலை செய்வதும், தோல் சம்பந்தமான கூலி வேலை செய்வதும் மற்றும் இப்படிப்பட்ட பிற வேலைகள் செய்வதும் அவர்கள் சமுதாய நிலை.

நம் நாட்டில் தீண்டத்தகாதவர்கள் என்று ஒதுக்கியும் ஒடுக்கவும் பட்டவர்களுக்கு 'அரிசனங்கள்' என்று காந்தி மறுபெயர் சூட்டியதுபோல, ஜப்பானில் இழிவுபடுத்தப்பட்ட இதா மக்களை இப்போது 'புறாக்குமின்' (Burakumin) என்று சொல்கின்றனர்.

செர்ரி இப்படிப்பட்ட இடத்தில், அது கோயிலில் இருந்தால்கூட உரிமையோடு பூக்க முடியுமா என்ன? எனவே அவமானத்தால் கூனிக்குறுகி அச்சத்தோடு மெல்ல இதழ்களை விரிக்கிறது.

26

## இசா

**Issa (1763-1827)**

Lo! The cherry blossoms have forced
a daimio to dismount.

**பண்ணையாரையும் குதிரையைவிட்டு**
**இறங்கச் செய்துவிட்டது**
**ஆ! செர்ரி மலர்கள்.**

ஜப்பானில் அரசரின்கீழ் நிலமானிய உரிமை உடையவர்களாக வாழ்ந்த பெரும் பண்ணையார்கள் அரசரைத் தவிர எவரைக் கண்டும் குதிரையைவிட்டு இறங்கமாட்டார்கள். அவ்வளவு செருக்கு!

பூத்துக் குலுங்கும் செர்ரி,— அந்தப் பண்ணையாளர்களையும் கீழே இறங்க வைக்கிறது. குதிரையிலிருந்து மட்டுமா? அகந்தையி லிருந்தும்தான். செர்ரி மலரின் சிறப்பை மட்டும் இக்கவிதை குறிக்கவில்லை. இயற்கை அழகின் முன் உயர்வு தாழ்வு கிடையாது என்பதையும் உணர்த்துகிறது.

## 27

## இசா

**Issa** (1763-1827)

Just bent on viewing cherries
when, 'on your knees on your knees.'

**'மண்டியிடு' 'மண்டி இடு' என்றால்**
**செர்ரி மலர்கள் பார்க்கும் வேளை,**
**அதற்காகக் கொஞ்சம் வளைந்து கொள்.**

இக்கவிதையும் ஜப்பானியச் சமுதாய நிலையைக் காட்டுவதாகவே அமைந்துள்ளது.

மலர்கள் பார்க்கும் பொழுதில் அங்குப் பெரும் பிரபு ஒருவர் வந்துவிட்டால் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு, "மண்டியிட்டு வணங்கு! மண்டியிட்டு வணங்கு" என்று அவருடன் வந்த அதிகாரிகள் உத்தரவு போடுவர். மக்களை நோக்கிக் கவிஞன் சொல்கிறான் "மண்டியிட்டால்கூட இச் செர்ரி மலர்களுக்கு மண்டியிடலாம். இந்த மனிதனுக்கு அஞ்சி ஏன் மண்டியிட வேண்டும்? கொஞ்சம் நன்றாக நினைத்துப் பாருங்கள்."

## 28

## ஷோக்கியு-நி
**Shokyu-Ni** (1713-1781)

The 'Forget me' has bloomed, but ah!
I cannot forget our old days.

'என்னை மறந்துவிடு' பூத்துவிட்டது
எப்படி மறப்பேன்
நம் பழைய நாள்களை?

ஷோக்கியு-நீ, கவிதை ஆசான் யாஹாவின் செயலராக இருந்த யாகல் ஃபூவை மணந்து கொண்ட பெண்மணி, யாஹாவின் மாணவி. கணவன் இறந்தபிறகு கவிதை யாத்திரையாக நாடெங்கும் சுற்றியவர்.

ஜப்பானிய மலர்களில் ஒன்றின் பெயர் 'என்னை மறந்துவிடு!' ஜப்பானிய மொழியில் - வாசுரே குசா (wasure-gusa) அதாவது பகல் அல்லி என்றும் இதற்குப் பெயர். தாவரவியல் பெயர் Hemorocallis aurantiaca. ஆங்கிலத்தில் உள்ள 'என்னை மறந்துவிடாதே' (Forget me not) என்பதை இங்கு நினைத்துக் கொள்வோம்.

தன் கணவனின் 13ஆவது ஆண்டு நினைவு நாளில் ஷோக்கியு-நீ இக்கவிதையை எழுதினார்.

'என்னை மறந்து விடாதே' என்பது சிறிய மூலிகைச் செடி. நீலம், வெண்மை, இளஞ்சிவப்பு ஆகிய நிறங்களில் பூக்கும். இக்குடும்பத்தைச் சார்ந்த ஒரு பூ அலாஸ்கா மாநிலத்தின் அரசாங்க மலராக உள்ளது.

29

## ஷோக்கியு-நி
**Shokyu-Ni** (1713-1781)

Suppose the 'maiden-flower' could speak
I wonder what its voice were like.

**இந்தக் கன்னி மலர்**
**பேச முடியும் எனில் ஆ!**
**குரல் எப்படியிருக்கும்?**

ஜப்பானிய மொழியில் உள்ள இப்பூவின் பெயர் 'ஓமினாயேசி'. இதன் பொருள் 'கன்னி மலர்' என்பது. இலையுதிர் காலத்து ஏழு மூலிகைகளுள் ஒன்று இது. மிக மிக அழகு வாய்ந்த காட்டுச் செடியாகிய இதில் மஞ்சள் மலர்களும் மெல்லிய இலைகளும் உண்டு.

'மலர்கள் பேசுமா?' என்று வியப்பு வினாவை எழுப்பிய பின் விடையாய் ஒருவேளை அது பேசிக் கேட்க நேரிட்டால் அதன் குரல் எது போல் இருக்கும் என்று, அடுத்த வினாவும் எழுகிறது. கன்னிகளே மலர்களாயிருக்கும் நாட்டில் இக்கன்னிமலர் என்று தனியே ஒரு மலர் உண்டா?

## 30

### ஓகாவா சுஷிகி

**Ogava shushiki** (1669-1725)

Even after awaking
from the dream
I'll see the colors of Irises.

**கனவிலிருந்து**
**விழித்த பின்பும்**
**காண்பேன் ஐரிசின் வண்ணங்கள்.**

இக்கவிதை ஓகாவா சுஷிகி தனது மரணத்தின் போது எழுதிய கவிதை. ஜப்பானில் இறக்கும் தருணத்திலும் கவிதை எழுதிவிட்டுப் போவார்கள். 'ஜப்பானிய இறப்புக் கவிதைகள்' என்று ஒரு கவிதைத் தொகுப்பே வெளிவந்திருக்கிறது. அந்த நூலில் காணப்படும் சுவையான செய்தி ஒன்று:

"கவிஞர் ஒருவர் தாம் இறப்பது உறுதியாகிக் கடைசி மூச்சைக் கொண்டு ஒரு கவிதை எழுதி வைத்தார். ஆனால் அவர் சாகவில்லை, பிழைத்துக் கொண்டார். அக்கவிதையைப் படித்த சிலர் அவரிடம் சென்று நீங்கள் சாவுக்கவிதை எழுதினீர்கள், ஆனால் சாகவில்லை. அதுவும் ஒருவகையில் நல்லதாயிற்று. உங்களுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்துவிட்டது; நீங்கள் எழுதியுள்ள இந்தக் கவிதையில் உள்ள பிழையைத் திருத்திவிடலாம், அல்லவா" என்றனர்.

இனி சுஷிகியின் இக்கவிதை, வாழ்க்கையை ஒரு கனவாகப் படிமம் செய்கிறது. கனவிலிருந்து விழித்தல் கண்மூடிவிடுவதாக அமைந்து விடுகிறது. வாழும்போது கண்டு கொண்டிருந்த தனக்கு விருப்பமான ஐரிஸ் மலர்களை அப்போதும்

கண்டு அதன் அழகில், வண்ணத்தில் சொக்கிக் போவதாகக் கூறுகிறார்.

பகட்டான மலர்களையும் கத்தி வடிவமான இலைகளையும் உடைய செடி ஐரிஸ். ஜப்பானிய மொழியில் காக்கிட்சுபாட்டா (Kakitsubata) அதாவது முயற்காது ஐரிஸ் என்று அழைக்கப்படும். இது ஒளி பொருந்திய ஒரு செடி. இதன் அடர்ந்த கருஞ்சிவப்பு இதழ்களிலிருந்து வண்ணங்கள் தயாரிப்பது ஜப்பானியர் வழக்கம். இளைய பெண்களை அந்த வண்ணத்தோடு இழைத்தும் குழைத்தும் பேசுவர் ஆண்கள்.

கவிப்பிதா பாஷோ காலத்தவரான ஓவியர் ஓகடாகோரின் (Ogatakorin 1661-1716) வண்ணத்தில் வார்த்தெடுத்த ஐரிஸ் மலர் ஓவியம் 'மோனோட்டோ' தண்ணீர் அல்லிகள்' (monoto water lilies) என்ற பெயரில் உலகப் புகழ் பெற்றது.

**31**

## இசா

**Issa** (1763-1827)

Come with me
let us play together, swallow
with out a mother.

**தாயில்லாச் சிட்டுக்குருவியே**
**வா என்னோடு**
**நாமிருவரும் சேர்ந்து விளையாடுவோம்.**

ஹைகூ நால்வருள் ஒருவராகிய இசா தனது இரண்டாவது வயதிலேயே தாயைப் பறிகொடுத்து விட்டார். பாட்டி, தாய்ப்பால் இன்றித் தவித்த பேரக் குழந்தைக்காக, தங்கள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுத் தாய்மார்களை அல்லது அந்த வழியாகப் போகிறவர்களை 'இந்தக் குழந்தைக்குக் கொஞ்சம் பாலூட்ட மாட்டீர்களா' என்று கெஞ்சுவார். இசா, இந்தக் கவிதையைத் தனது ஆறாவது வயதில் எழுதியதாக அவரே குறிப்பிட்டிருக்கிறார். 'சிட்டுக்குருவி'யைத்தான் இக்கவிதையில் இசா குறிப்பிட்டிருக்கிறார். இக்கவிதைக்குப் பிறகு படம் வரைந்தபோது தூக்கணாங்குருவியை வரைந்து விட்டார். ஏனென்று தெரியவில்லை.

'காக்கை குருவி எங்கள் ஜாதி' என்று பாடிய பாரதியின் பாட்டன் இசா.

**32**

## இசா

**Issa** (1763-1827)

Once more in vain
the step child
opens its beak.

மாற்றாள் மகவு வீணாய்
மறுபடியும் ஒருமுறை முயன்றது
அலகைத் திறக்க.

இந்த ஹைகூவும் இசாவின் தன் வாழ்வுக் குறிப்புகளைக் கொண்டதுதான். தாயை இழந்த இசா சிற்றன்னையால் கொடுந்துயரங்களுக்கு உள்ளானார். சிற்றன்னைக்கு (தன் தந்தையின் இரண்டாம் தாரம்) மாற்றாளின் குழந்தை தானே இசா. கஞ்சிகூடக் காட்டாமல், தன் கணவனின் முதல் மனைவி குழந்தை இசாவை வதைத்த பெருமாட்டி அவர்.

தன் 'சுயசரிதை'யில் இசா எழுதுகிறார்:

"ஒரு நாளில் நூறுமுறை அடிக்கப்பட்டேன், ஒரு மாதத்தில் ஆயிரம் முறை அடிக்கப்பட்டேன். ஓர் ஆண்டின் 365 நாள்களில் ஒருநாள்கூட என் கண்கள் வீங்காமல் இருந்ததில்லை."

இந்தக் கவிதையில் தன்னைப் பறவைக் குஞ்சாக்கிக் கொண்டு இசா பேசுகிறார். அடிபட்ட பறவை அலகைத் திறக்க முடியாததுபோல், தான் ஒரு முறைகூட வாயைத் திறந்து தன் துன்பத்தை வெளிப்படுத்த முடியவில்லையே!

33

## கிஷோ
## Kicho

Lightening!
fleeting up the wall
the legs of a spider.

**மின்னல்!**
**சுவரில் வேகமாய் ஓடும்**
**சிலந்தியின் கால்கள்.**

வீடு இருண்டு கிடக்கிறது. ஒரு மின்னல் கொடி சட்டென்று சுவரில் படர்ந்து மறைகிறது. அந்த மின்னல் வெளிச்சத்தில் சுவரில் இருந்த சிலந்தியின் கால்கள், கவிஞன் கண்களில் பதிவாகின்றன.

இந்தக் கவிதையில் மின்னல் போலவே பளிச்சிடுகிற, ஆனால் மின்னலைப்போல மறைந்துவிடாத ஒரு கருத்து உண்டு. பாஷோவும் அவரைப் பின்பற்றியவர்களும் தம் சுற்றுச்சூழலில் இருப்பவற்றின்மீது கவனம் செலுத்தினர். மிகச் சாதாரணமான பூச்சிகள், புழுக்கள், பறவைகள் இவையெல்லாம் வாக்கா போன்ற உயர்வகை இலக்கியப் படைப்புகளில் இடம்பெறும் வாய்ப்பில்லாதவை. ஆனால் பாஷோ பரம்பரை அப்படிப்பட்டவற்றுக்குக் கவிதையில் இடம் கொடுத்ததைக் கவிதைக் கருணை என்று' சொல்லலாம்.

மின்னல் என்ன வேகத்தில் சுவரில் படர்ந்து ஓடுகிறதோ, அந்த வேகத்தில் அந்தச் சிலந்திப் பூச்சியும் ஓடுகிறது. கவிஞர் கண்களில் மின்னல் பதிவாவது போலவே சிலந்திப் பூச்சியின் கால்களும் அந்த வெளிச்சத்தில் பதிவாகி விடுகின்றன.

மின்னலின் தெறிப்பும், சிலந்தியின் திடீர்ப் பாய்ச்சலும் அடுத்தடுத்துக் கவிதையில் இடம்பெறுகின்றன.

மானுடச் சூழலில் வாழும் உயிரினம் பற்றிய ஒரு புதிய விழிப்பு ஏற்படுவதோடு, மானுடக் கலை உணர்வைக் கிளர்ந்து எழச் செய்யும் அதன் ஆற்றலும் இந்த ஹைகூவில் இடம்பெற்றுள்ளது.

இன்னொரு ஹைகூ இங்கு நினைக்கத் தக்கது; இதை எழுதியவர் இசா.

**சிலந்தியின் குழந்தைகள்**
**எல்லாம் எங்கோ போய்விட்டன**
**பிழைப்புக்கு வழிதேடி.**

34

## ரென்செட்சு

**Rensetsu** (1653-1707)

This morning a hungry butterfly
tries to alight on painted chrysanthemum

**என்ன பசியோ பட்டாம்பூச்சிக்கு**
**இன்று காலை? இறங்க முயல்கிறது**
**ஓவியக் கிறிசாந்தமத்தின்மீது.**

கனவுருவக் கற்பனையாலானது இந்த ஹைகூ. படத்தில் உள்ள கிறிசாந்தமப் பூவை எந்தப் பட்டாம்பூச்சி போய்த் தேனுக்கு மொய்க்கும்? தோய்க்கப்பட்ட வண்ணத்தின் வாடை அதற்குத் தெரியாதா? பக்கத்தில் போகுமா? என்றெல்லாம் இக்கவிதை பறி விமர்சனங்கள் உண்டு. ஆனால் பசி எடுத்தால் அதுவும், ஆளையே அடித்து வீழ்த்தும் அளவு கடந்தால், எந்தப் புலன்தான் எதை அறியும்? பசி கண்ணை மறைக்கும் என்பார்கள். பசித்த பட்டாம்பூச்சியின் கண்களுக்கு ஓவியக் கிறிசாந்தமமே உண்மைக் கிறிசாந்தமமாகத் தெரிகிறது என்றுதான் நாம் வைத்துக் கொள்ள வேண்டும். ஓவியனும் உயிரோவியமாக அதைத் தீட்டியிருக்கிறான் என்று அதன் கலை நேர்த்தியையும் நாம் பாராட்டலாம்.

கிறிசாந்தமப்பூ, சூரியக் கதிர்கள் போன்ற தோற்றமுடையது. வெவ்வேறு வண்ணங்களில் பூப்பது கிறிசாந்தமம்; கவர்ச்சி மிக்கது. தங்க மலர் என்றே இதனைக் குறிப்பிடுவர். கிறிசாந்தமும் களங்கமற்ற ஒழுக்கத்திற்குக் (கற்பிற்கு) குறியீடு.

இப்பூவும் பொலோனியா என்னும் பூவும் ஜப்பானிய அரியணையில் செதுக்கப்பட்டிருந்தன. பொலோனியாவில்தான் பீனிக்ஸ் பறவை கூடு கட்டுமாம்.

இவ்விரண்டு பூக்களுமே நீண்ட வாழ்வுக்கும் நிரந்தரத் தன்மைக்கும் குறியீடுகளாகக் கவிதைகளில் இடம்பெறும். நம் தமிழில் முல்லை கற்பையும் வாகை வெற்றியையும் குறிக்கும் குறியீடுகளாவதை இங்கு நாம் எண்ணிப் பார்க்கலாம்.

35

## சிய்யோ-நி

**Chiyo-Ni** (1703-1775)

While I was musing on my theme
repeating "cuckoo" day has dawned.

கருத்தூன்றிக் கிடந்தேன்
கருப்பொருள் பற்றி; விடிந்தது பொழுது
குக்கூ குக்கூ என்று.

இளம் பெண்ணாக இருந்தபோது கவிஞர் சிய்யோ. புகழ்பெற்ற கவிஞர் ஒருவரிடம் கவிதை எழுதக் கற்றுக் கொடுக்கும்படி கேட்டார். அவர் மிகப் பொதுவான ஆனால் மிகக்கடினமான குயில் என்கிற தலைப்பைக் கொடுத்துக் கவிதை எழுது என்று அவரிடம் சொல்லிவிட்டுப் பக்கத்து அறையில் படுத்துத் தூங்கப் போய்விட்டார். அடுத்த நாள் காலையில், தலைப்பைக் கொடுத்துவிட்டுத் தூங்கப்போன பெருங்கவிஞரிடம் சிய்யோ இந்தக் கவிதை எழுதிய காகிதத்தை நீட்டினார். செப்பமான இக்கவிதையைப் படித்துவிட்டு வியப்பில் திகைத்து வெட்கப்பட்டார் பெருங்கவிஞர்.

இக்கவிஞர் பான்கோ என்னும் கவிஞரின் மனைவி. கீயோரை என்னும் கவிஞரின் சகோதரி. இவர் திருமணமானவர் என்பதைச் சுட்டும் வகையில் சிய்யோ-ஜோ என்ற பெயரும் உண்டு. பிறகு பவுத்தத் துறவி ஆகிவிட்ட நிலையில் சிய்யோ-நி என்ற பெயரும் பெற்றார்.

36

## மெய்செட்சு

**Meisetsu** (1847-1926)

The wreaths attracting butterflies
alas! they are on a coffin.

**மலர் வளையங்கள்**
**பட்டாம்பூச்சிகளைக் கவர்ந்திழுக்கின்றன**
**அந்தோ! அவை ஒரு சவப் பெட்டியின்மேல்.**

ஹைகூ நால்வருள் - ஒருவராகிய ஷிகியின் மாணவர் மெய்செட்சு.

மலர்கள் வேறுபாடற்றவை வாழ்வை அலங்கரிப்பதுபோல மரணத்தையும் அலங்கரிப் பவை. வாழ்வுக்கு மாலைகள் மரணத்திற்கு வளையங்கள் என்று வடிவங்கொள்ளும் மலர்கள் அவற்றுள் எதிலிருப்பதற்கும் சம்மதிக்கின்றன.

பேதைமையுள்ள பட்டாம்பூச்சிகள் மலர்வளையங் களைக் கண்டு மயங்குகின்றன. கவிஞனுக்குத்தான் ஐயோ! பாவம் என்று தோன்றுகிறது.

**37**

## ஷிகி

**Shiki** (1867-1902)

Cockscomb
I'm sure they are at least
fourteen or fifteen stalks.

**காக்ஸ் கோம்**
**பதினான்கு அல்லது பதினைந்து**
**காம்புகள் இருக்கும் இது உறுதி.**

இக்கவிதை ஷிகியின் எண்ணற்ற கவிதைகளில் அவருடைய உச்சநிலைக் கவித்துவத்தைக் காட்டுகிறது என்கின்றனர்.

காக்ஸ்கோம் என்னும் செடி, நெருப்புப்போல் தகதகக்கும் வண்ணம் கொண்டது. நெருக்கமாய்ப் பூக்கும் ஒளிர் சிவப்பு அல்லது மஞ்சள் மலர்களைக் கொண்டு பரவசத்தில் சிலிர்த்து, பார்ப்பவர்களையும் அப்படிச் சிலிர்க்கச் செய்துவிடும். இரண்டு அடி உயரத்திற்குக் காம்புகள் நீண்டிருக்கும். எலும்புருக்கி நோயால் இரத்தம் கக்கும் ஷிகி என்னும் கவிக்குயில் படுத்திருக்கும் இடத்திலிருந்தே பார்க்கும்படி அவருடைய வீட்டுத் தாழ்வார விளிம்பில் பூத்திருக்கின்றன பூக்கள். கொத்துக் கொத்தாய் - அடர்த்தியாய் - நெருக்கமாய்ப் பூத்திருக்கும். அவற்றை, இவ்வளவு என்று எண்ணிப் பார்த்துச் சொல்ல முடியாது.

சாகும் நாளை அகத்தே எண்ணி நைந்து கொண்டிருக்கும் ஒரு மனிதனும் வெளியே மதர்த்துக் கொழுத்த ஒரு வாழ்க்கையும் ஆகிய முரண்பாடு இக்கவிதையைப் படிக்கிறவர்க்கு இருக்கும் துயரத்தைத் துடைக்க முடியாதபடி வளர்க்கவே செய்யும்.

38

## ஹாஜின்

**Hajin** (1676-1742)

Lo! a warrior is going
To the wine-shop through the snowy night.

**பாருங்கள்! ஒரு படைவீரன்
மதுக்கடைக்குப் போகிறான்
இரவுப் பனியூடே!**

ஹாஜின் எழுதியுள்ள இந்த ஹைகூ, குளிர் அடர் பனியூடு பயணம் செய்துதான் நம்மிடம் வந்திருக்கிறது. நடுங்கவைக்கும் இரவுப் பனியில் வேகமாக மதுக் கடைக்குப் போகிற இப்போர்வீரன் தான், குடிப்பதற்காக இப்படிப் பாசறை விட்டு வெளியே போக முடியுமா? ஒரு சிற்றூரில் முகாமிட்டிருக்கும் படை வகுப்புகளின் தலைவன் தனக்கு மது வேண்டும் என்றுதான், நடுங்க வைக்கும் இந்தப் பனி இரவில், தனக்குக் கீழ்நிலையில் உள்ள வீரனைச் சரக்கு வாங்கிவர அனுப்பியிருக்க வேண்டும். மது, சமமாக மயக்கத்தில் மக்களை ஆழ்த்துகிறது. மனிதன்தான் மக்களைச் சமத்துவமாக நடத்துவதில்லை. ஹாஜின் பாஷோவின் முதன்மை மாணவர்களில் ஒருவரான கிகருவின் மாணவர்.

**39**

## ஹாஜின்

**Hajin** (1676-1742)

Behold the white wistarias
the milky way
blown by the wind.

பாருங்கள் வெண் வெஸ்தாரியாக்கள்
காற்று சிதறடித்த
பால் வீதி மண்டலம்.

வெஸ்தாரியா என்பது முறுக்கிப் பின்னி வளரும் ஒரு குத்துச் செடி. நீண்ட தோடுகளையும், கூர்மையான இலைகளையும் கொண்டது. நீலம், கருஞ்சிவப்பு, வெண்மையாகிய மூன்று வண்ணங்களில் பூக்கும் வகைகளைக் கொண்டது. மிகப் புகழ்பெற்றவை ஜப்பானிய வெஸ்தாரியா-சீன வெஸ்தாரியா என்னும் இருவகை.

இக்கவிதையில் வெள்ளைப் பூக்களைப் பூக்கும் வெஸ்தாரியாவைத்தான் கவிஞர் குறிப்பிடுகிறார். இரவில் அப்பூக்கள் மெல்ல ஊசலாடுகின்றன. உருண்டை, திறப்புக் கொத்துக்களெனக் கோடி கோடி நட்சத்திரங்களைக் கொண்ட பால்வீதி மண்டலத்தை, வான்வெளிக் காற்று அசைத்துப் பூமியில் உதிர்த்தாற்போல, அவை காட்சி தருகின்றன கவிதைக் கண்களுக்கு.

பால்வீதி மண்டலம், இனி மண்மகளிடம் கோரிக்கை வைத்து வெள்ளை வெஸ்தாரியாப் பூக்களைப் பெறவேண்டும்! வேறென்ன செய்ய?

**40**

## சூஷிகி

**Shushiki** (1668-1725)

The cherry blossoms at the well
In danger are! see, drunken men.

**செர்ரி மலர்கள் கிணற்றருகே**
**என்ன ஆகுமோ?**
**பாருங்கள்! குடியர்கள்.**

பெயர் பெற்ற இந்தக் கவிதையை எழுதியபோது சூஷிகியின் வயது பதின்மூன்று. யூனோவிற்கு ஒருமுறை சென்றிருந்தபோது செர்ரி மலர்களின் அழகில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருந்தார். ஃபூமோன் கோயிலின் கவன்னான் மண்டபத்துக்குப் பின்பக்கம் இப்படிச் செர்ரியில் மயங்கியிருந்தபோது மூன்று குடியர்கள் போதைக் கிறக்கத்தோடு அப்பக்கமாக வந்தார்கள். சட்டென்று உணர்ச்சி வேகத்தில் இக்கவிதை அவரிடமிருந்து பீரிட்டெழுந்தது.

ஒரு சிறு தாளில் அந்தக் கவிதையை எழுதி அந்த மரத்தில் அதனை சூஷிகி தொங்கவிட்டார். ஒவ்வொரு நாளும் இப்படி எழுதி எழுதி அம்மரத்தில் கவிதாயினி கவிதையைத் தொங்கவிட்டதை, சுவையுணர் தேர்ச்சிமிக்க இளவரசனாகிய ரின்னோஜி கோயில் மடாதிபதி கண்டு, அவற்றை ஒன்றுவிடாமல் திரட்டினார். சூஷிகியின் கற்பனை, இயற்கை நேயம் ஆகியவற்றை உணர்ந்த அவர் அம்மரத்திற்கே அவர் பெயரைச் சூட்டினார். 'சூஷிகி செர்ரி' என்ற பெயர் அதற்கு நிலைத்து நின்றது. ஆனால் அச் செர்ரி மரம் நிலைத்து நிற்கவில்லை. பிறகு அதற்குப் பதிலாக மற்றொரு செர்ரி கன்றை நட்டு வளர்த்தார்கள்.

சூஷிகி பெயராலேயே இக்கவிதையின் ஆங்கிலப் பெயர்ப்பும் குழப்பம் உடையதாக இருப்பதால், வேறு சில மொழிபெயர்ப்புகளும் ஏற்பட்டன.

**41**

## சோசெகி

**Soseki** (1865-1915)

All the chrysanthemums you have ;
lay them in the coffin.

**உங்களிடம் உள்ள**
**கிறிசாந்தமம் எல்லாவற்றையும்**
**இந்தச் சவப்பெட்டியில் வைத்துவிடுங்கள்.**

சோகெகி - ஆங்கில இலக்கியங்கள் தேர்ந்தவர், புதினப் படைப்பாளியும் கூட.

ஓட்சுகா அம்மையார் மரணத்தின்போது சோசெகி எழுதி, அவர்கள் குடும்பத்தார்க்கு அனுப்பி வைத்த ஹைகூ இது. ஓட்சுகா அம்மையார் சோகெகியின் மிக நெருங்கிய நண்பர். கிறிசாந்தமம் கற்புக்குக் குறியீடான மலர். முல்லை சான்ற கற்பைத் தமிழில் நாம் அறிவோமே! மூன்று நாள் வாழ்க்கையிலேயே முழுமை அடைந்து விடுகிற அரிய பூ கிறிசாந்தமம். நிலையின்மையின் மடியில் வீழ்ந்தவர்க்கு சவப்பெட்டியில் என்ன சொல்லும்? கவிஞரின் ஜப்பானியக் கவிதையில், 'உங்கள் குடும்பத் தோட்டத்துக் கிறிசாந்தமப்பூ அனைத்தையும் அல்லது உலகில் உள்ள கிறிசாந்தமம் அனைத்தையும்' என்று பொருள் கொள்ளும்படி பொருள் பொதிந்திருக்கிறது. கவிஞனின் ஆற்றொணாத் துயரத்தை வெளிப்படுத்தும் ஆற்றல் மிக்கது இக்கவிதை என்பர் அறிஞர்.

## 42

## சோனேயோ

**Sono-Jo** (1649-1723)

**(பாஷோ மாணவர்)**

The change of cloth - I blame my self
I did not weave an inch of cloth.

**மாற்றுத்துணி**
**நாணுகிறேன் நான்**
**ஓர் அங்குலங்கூட நெய்யவில்லை.**

ஜப்பானில் பழங்காலத்தில் பொதுவான ஒரு மரபு இருந்தது. பெண்கள் தங்கள் பயன்பாட்டுக்குத் தாங்களே துணி நெய்து கொள்வார்கள். இங்கு நியாய உணர்ச்சியுள்ள கவிஞர் மாற்றுத் துணி என்று நிறுத்துகிறார். அதைப் பார்க்கும்போதே குற்ற உணர்ச்சி தனக்கு ஏற்பட்டுவிட்டதை வெளிப்படுத்துகிறார்.

அணிந்தாரா! அணியவில்லையா! புரியவில்லை.

உழுபவனுக்கு உணவில்லையா?

நெய்பவனுக்குத் துணியில்லையா?

என்கிற கவிக்கோபம் (ஷெல்லி, இக்பால்) நமக்கும் ஏற்படுகிறது.

உழாமல் உண்ணாதே என்பதற்கு, உழைக்காமல் உண்ணாதே என்று பொருள் கொள்கிறோம். நெய்யாமல் உடுக்காதே என்பதும், அப்படி ஆகாமல் உன் உடையை நீயே தைத்துக் கொள் என்கிறது இந்த ஜப்பானியக் கவிதை, பழைய காலத்தில்!

43

**சுடி-யோ**

**Sute-Jo** (1633-1698)

O! summer moon, is there
a short cut in the roads of clouds.

**கோடை நிலாவே**
**மேகப் பாதைகளில் ஒரு**
**குறுக்கு வழி உண்டோ?**

சுடி-யோ தம்பா மாநிலத்து நீதிபதியின் மனைவி. கணவனுக்குப் பிறகு துறவியானவர். கிஜினின் மாணவர். ஜப்பானியர்கள் கோடை முன்பருவம், கோடை நடுப்பருவம், கோடைப் பின்பருவம் என்று அப்பருவத்தை மூன்றாக வகுத்துள்ளனர். மே 6 முதல் ஜூன் 5 வரை கோடை முன்பருவம்; ஜூன் 6 முதல் ஜூலை 6 வரை நடுக் கோடைப் பருவம்; ஜூலை 7 முதல் ஆகஸ்ட் வரை கோடைப் பின்பருவம்.

இக்கவிதை கோடை நிலாவைப் பற்றியது. கோடை நிலா என்ற தலைப்பிலேயே ஹைகாய் பாணியில் 32 கணுக்களைக் கொண்ட நீண்ட கவிதை ஒன்று ஜப்பான் மொழியில் இருக்கிறது. இனி சுடி-யோவின் கவிதை பற்றி...

கோடைக் கால இரவு மிகவும் குறுகியது. நிலாவை வெகு நேரம் பார்க்க முடியாது. அவ்வளவு வேகமாக நிலா மறைந்துவிடுவதற்குக் காரணமாகக் குறுகிய இரவு நேரத்தைக் கவிஞர் குறை சொல்லவில்லை. நிலா அவ்வளவு வேகமாக இரவைக் கடந்து போய்விட்டதாகத் தோன்றுகிறது. மற்றப் பருவங்களில் இப்படி இல்லை. வானத்து நெடுஞ்சாலையில் நிலா குறுக்கு வழியில்தான் கடந்து போயிருக்க வேண்டும் என்று கவிஞருக்குத் தோன்றுகிறது. நிலாவிடமே கேட்டுவிடுகிறார். எந்தக் குறுக்கு வழியில் இவ்வளவு விரைவாகப் போய்விட்டாய்?

44

## கிககு

**Kikaku** (1633-1698)

Take a pair of wings
from a dragonfly, you would
make a pepper pod.

**தும்பியின் சிறகு இரண்டும்
எடுத்துவிடு! நீ ஒரு
மிளகுத் தோடு செய்துவிடுவாய்.**

இலையுதிர்கால நாளொன்றில் மகாகவி பாஷோவும் அவருடைய தலை மாணாக்கர் பதின்மரில் ஒருவராகிய கிகருவும் நெல் வயலூடே சென்று கொண்டிருந்தனர். கிகுவின் பொறிதட்டிய கற்பனை இந்தக் கவிதையைச் சட்டென்று படைத்தது. கற்பனைப் பொறி தட்டக் காரணம், அங்குப் பறந்து கொண்டிருந்த ஒரு செந்தும்பிதான்.

தும்பிகளில் செந்நிறமானவை பார்ப்பதற்கு மிளகுத் தோடு போலத் தான் தோன்றும். அதுவும் செம்மிளகுத் தோடு (Red pepper) மெலிந்த அதன் வடிவத்தில், மிளகு உதிர்ந்ததும் பறந்துவிடுமோ என்றுதான் பார்ப்பவரை நினைக்க வைக்கும்.

இந்த ஹைகூவில் மிளகுத் தோடு செய்வதற்காகப் பறக்கும் செந்தும்பியின் சிறகுகளை வெட்டுவதைப் பாஷோவால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. மிளகை உதிர்த்துவிட்ட தோடு, உயிரை இழந்துவிட்ட உடல் போலத்தானே? அப்படி உயிரற்ற தோடு ஒன்றை உருவாக்க உயிருள்ள தும்பியின் சிறகுகளை வெட்டிக் கொலை செய்வது கவிதை அறமாகாது என்றுதான் பாஷோ தன் மாணாக்கன் படைத்ததை 'இது ஹைகூவே இல்லை' என்று மறுத்துவிட்டார்.

பின் எப்படி இப்படிமத்தைக் கவிதையாக்குவது? அடுத்த கவிதையைப் பாருங்கள்.

45

## பாஷோ

**Basho** (1644-1691)

Add a pair of wings
to a pepper pod. you would
make a dragonfly.

இரு சிறகுகள்
மிளகுத் தோட்டுக்கு நீ கொடு
ஒரு தும்பியைப் படைத்து விடுவாய்.

ஆசான் பாஷோ, மாணாக்கன் சிககுவிடம் "ஒரு ஹைகூ நீ எழுத விரும்பினால் அதற்கு உயிர் கொடு. உயிருள்ள தும்பியைக் கொன்று ஒரு மிளகுத் தோடாக்குவதற்குக் கவிதை தேவையில்லை. உயிரற்ற மிளகுத்தோட்டுக்குச் சிறகுகள் கொடு. உயிர்பெற்று அது பறக்கட்டும். அதனோடு சேர்ந்த உன் ஹைகூவும் சிறகடிக்கும்" என்றார்.

நீதி புகட்டுவது - கருணைக்கசிவு - உயிர் இரக்கம் என்பன மட்டுமே பாஷோ மாற்றிப் படைத்த கவிதையின் உள்நோக்கம் இல்லை என்கின்றனர் ஆய்வாளர்கள்.

இந்த 'மிளகுத் தோடு' கவிதையில் இதயத்தைப் பறிகொடுத்த கென்னத் யசுதா என்னும் அமெரிக்க ஜப்பானியர், 'மிளகுத்தோடு' என்கிற தலைப்பிலேயே ஒரு நூல் எழுதியுள்ளார். ஜப்பானிய ஹைகூ பற்றி ஆராய்ந்து ஜப்பானில் உள்ள டோக்கியோ பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெற்ற முதல் அமெரிக்க ஜப்பானியர் இவர்.

46

## ரென்செட்சு

**Rensetsu** (1653-1707)

One leaf flutters, down in the wind
another leaf drifts down alas.

**ஓர் இலை காற்றில் நடுங்கி வீழ,**
**ஓர் இலை இழுப்புண்டு வீழ**
**என்ன கொடுங்காலம்!**

ரென்செட்சு பாஷோ மாணவர். மறவர் குடியில் பிறந்து பௌத்த மத குருவானவர். இலையுதிர் காலம்! குளிர்க்காற்று வீசுகிறது. இதுவரை மரத்தின் கிளையிலிருந்த - ஓர் இலை இதோ நடுநடுங்கிக் கீழே விழுகிறது. இதோ இப்பொழுது இன்னொன்றைக் காற்று கீழே இழுத்துக் கொண்டு போகிறது. இழப்பின் துயரமும் தவிப்பும் மரத்தை என்ன பாடுபடுத்தும்? காலம் கருணையற்றது. மனிதர்களையும் இப்படித்தான் உதிர்த்துத் தள்ளுகிறது.

ஹைகூ கவிதைகளில் இன்ன மலர் என்று குறிப்பிட்டுச் சொல்லாமல் மலர் என்று மட்டும் சொன்னால் அது செர்ரி மலரைத்தான் குறிக்கும் (நம் தமிழில்கூட, பூவென்று சொன்னால் அது தாமரைப் பூவைத்தான் குறிக்கும் என்பர்). பூ என்றால் செர்ரிதான் என்பதுபோல், என்ன இலை என்று குறிப்பிடாமல் இலை என்று மட்டும் சொன்னால் அது பொலோனியா இலைதான்.

பொலோனியா அல்லது 'மகாராணி மரத்தின்' இப்பெயர் ரஷ்யாவை ஆண்ட முதலாம் ஜார்பால் என்பவனது மகளின் பெயர். இது வேகமாக வளரும். இரண்டு பருவங்களில் இருபது அடி

உயரம் வளர்ந்துவிடும். மெல்லிய மணம்கொண்ட இந்த மரத்திலிருந்து கட்டை மிதியடிகள், ஆடைகள் வைக்கத்தக்க பெட்டிகள் செய்து கொள்வர் ஜப்பானியர்.

பொலோனியாவின் இதழ்கள் ஆண்டு நெடுக உதிர்ந்து கொண்டே இருக்கும். அவை சருகாகி மஞ்சள் நிறமடைந்து மண்ணின் மடியில் விழுகின்றன. இவ்விலைகளின் உதிர்வு, மனிதர்கள் தனிமைக்கும், கடந்துபோன காலத்திற்கும் குறியீடுகளாகின்றன.

பொலோனியாவின் பெரிய கருஞ்சிவப்பு மலர்கள் ஹைகூவில் தனித்துவமான இடம் பெறுகின்றன. ஜப்பானிய மகாராணியின் தலையில் இலைகளோடு கூடிய பொலோனியா மலர் சடைவில்லையாக இடம் பெற்றது.

இக்கவிதையின் ஜப்பானிய மூலத்தில் இலைகள் வீழ்ச்சி ஏற்படுத்தும் விளைவுணர்ச்சியைக் குறிக்க To Tsu - என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது ஜென் மாணாக்கன் ஞான ஒளி எய்தும்போது வெளிப்படுத்தும் வியப்புச் சொல்.

# 47

## கிககு

**Kikaku** (1653-1707)

See how a tree frog is swaying
perched on a banana leaf.

மரத் தவளை
என்னமாய் ஊசலாடுகிறது பாருங்கள்
வாழையிலை மேல் உட்கார்ந்து

'பழைய குளத்தில் தவளை குதித்துத் தண்ணீர் ஓசை' என்னும் பாஷோவின் கவிதை ஹைகூ படிக்கிறவர், படைக்கிறவர் எல்லாருடைய மனக் குளத்திலும் விழுந்து அலைகளை எழுப்பத்தான் செய்யும். எத்தனையோ வகையான விளக்கங்கள் அந்த ஹைகூவுக்கு.

பொதுவாக எல்லாவகைத் தவளைகளுமே ஜப்பானியர்கள் கண்களுக்கு அழகானவை. எல்லாவகைத் தவளை ஓசையும் இனிமையானதே. வசந்தகாலத்தில் அந்திக்குப் பிறகு புதர்களுக்குள் இருந்து தவளை ஓசையெழுப்ப, நாணமடைகிறாள் என்று தவளைக்கு வசந்த காலத்தை எழுதிக் கொடுத்திருக்கிறார்கள் ஜப்பானியர்கள்.

ஜப்பானிய மொழியில் பல்லாயிரக்கணக்கான கவிதைகளில் தவளை இடம் பெற்றிருக்கிறது. பாஷோவால் பாடப்படுவதற்கு முன்புவரை தவளைகள் அவற்றின் பாடலுக்காகவே கொண்டாடப்பட்டிருக்கின்றன. முதன்முதலாக இசைத்தட்டில் ஜப்பானியர்கள் பதிவு செய்ததே தவளைப் பாடல்தான். இப்போதும்கூட இசை பயில்பவர்கள் வெவ்வேறு வகையான தவளைகளின் பாடல்களைப் பதிவுசெய்து

வைத்துக்கொண்டு அதன்மூலம்தான் கற்பதாகச்
சொல்கிறார்கள்.

தம் ஆசான் பாஷோவுக்கு விருப்பமான
வாழையின் பெரிய இலைமீது சின்னஞ்சிறு
பச்சைத் தேரை உட்கார்ந்து அசைக்கும் காற்றால்,
ஒரு கவலையுமில்லாமல் ஊஞ்சலாடும் காட்சி,
கிகரு உள்ளத்தில் புத்துணர்ச்சியைப்
பெருக்குகிறது.

48

## கான்செட்சு

**Kansetsu** (1653-1707)

(குறிப்புகள் கிடைக்கவில்லை)

Could they be hymns?
frogs are chanting
in the temple well.

**பக்திப் பாசுரங்களோ?**
**தவளைகள் பாடுகின்றன**
**கோயில் கிணற்றில்.**

ஜப்பானியத் தவளைகள் பலவகை என்று முன்பு சொன்னோம். இது ஒரு பக்தித் தவளை. எப்படியோ உலகியலிலிருந்து ஒதுங்கியோ உலகியல் கொடுத்த வாய்ப்பாலோ தவளை, கோயிலுக்குச் சென்றுவிட்டது. மாலை கட்டும் இடத்தில், மடப்பள்ளியில், மூலவர் இருக்கும் இடத்தில் போய்த் தவளை இருக்க முடியுமா என்ன? கோயில் கிணற்றில் வாழும் வாய்ப்பைப் பெற்றது. "படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனோ" என நம் ஊர்ப் பத்தித் திலகம் பாடினால், "கிணற்றுள் தவளையாய் இருந்து உன் கேண்மைகள் தொடர்வேனோ" என்று ஜப்பானியத் தவளை பாடுகிறது. நம் ஊர் நாயன்மார்களுக்குக் கிணற்றுத் தவளை ஓசைகூடக் கரகரா, கரகரா என்று காதில் வந்து பாடாமல் அரகரா அரகரா என்றுதானே அர்த்தமாகும்?

49

## ஒஜகி ஹோசாய்
**Ozaki Hosai** (1885-1926)

Looking back at the beach
even my foot prints are gone.

**கடற்கரையில்**
**திரும்பிப் பார்க்கையில்**
**காணோம் என் காலடிச் சுவடுகளும்.**

இவர் ஹைகூவின் கடந்த நூற்றாண்டு தொடக்கத்தின் கால் நூற்றாண்டுக் காலம் வ வாழ்ந்தவர். இவர் பிச்சை எடுத்தும், கோயில்களி தொண்டூழியம் புரிந்தும் வாழ்க்கையை ஓட்டியவ நடுநிலைப்பள்ளியில் படிக்கும்போதே கவிதைக எழுதியவர். சீயூ செஸ்கியூ ஹைகூ வட்டத்தி அப்போதே சேர்த்துக் கொள்ளப்பட்டவர். சட்ட பயின்று பட்டம் பெற்றவர் (டோக்கியே பல்கலைக்கழகத்தில்). ஆயுள் காப்பீட்டுக் கழகத்தி பெரிய வேலையில் அமர்ந்திருக்க வேண்டியவ வீடு, குடும்பம், தொழில் ஒவ்வொன்றா எல்லாவற்றையும் விட்டுவிட்டார். ஹைகூவை மட்டும் எப்போதும் எந்தச் சூழ்நிலையிலு விட்டுவிடவில்லை. ஹைகூ வடிவ மரபுகளை மீறியவர். பாடுபொருளிலும் அப்படி மீறியவர்தான்

இக்கவிதையில் கடற்கரையில் நடந்துகொண்டே இருக்கும் கவிஞர் சட்டென்று திரும்பி பார்க்கிறார், தன் காலடிச் சுவடுகளும் மறைந் போயிருந்தன. ஒரு தன்னிரக்கத்தை நம்மு இவ்வரிகள் முதலில் நமக்குள் உண்டாக்குகின்றன 'சற்றுமுன் நான் பதித்த என் பாதச் சுவடுகளே மறைந்துவிட்டன என்றால், எனக்குமுன்

வாழ்ந்தவர்கள் தலைமுறை தலைமுறையாய் விட்டுச்சென்ற சுவடுகளுக்கு என்ன நேர்ந்திருக்கும்?'

தனது வாழ்க்கை அழிந்து கொண்டிருப்பதற்குப் புலம்பும் ஹோசாய், மனித வர்க்கத்தின், பிரபஞ்சத்தின் துயரத்தில் சங்கமமாகிறார் என்று இக்கவிதைக்கு விளக்கம் செய்கின்றனர் ஹைகூ ஆய்வாளர்கள்.

ஹோசாயின் இன்னொரு கவிதை; ஹைகூ 'தப்பாக அடிக்கப்பட்ட ஆணி தலை குனிந்தது.' அலை அலையாய் வாழ்வியல் பொருண்மைகளை இக்கவிதையில் நாம் பெற முடியும்.

50

## சிய்யோ-நி

**Chiyo-Ni** (1703-1775)

With no flowers
you are free as a willow.

பூக்கள் இல்லாமல்
நீ சுதந்தரமாய் இருக்கிறாய்
ஒரு வில்லோ மரம்போல.

சிய்யோ, தன் கணவனையும் குழந்தையையும் அடுத்தடுத்துப் பறிகொடுத்திருந்த வேளையில், அவருடைய நண்பர் ஒருவர் ஜப்பானிய முதுமொழி ஒன்றைப் பயன்படுத்தி ஒரு ஹொக்கு எழுதியனுப்பியிருந்தார். அந்த முதுமொழி, பூவில்லாமல் போனதற்கு வில்லோ புலம்பத் தேவையில்லை என்பதுதான். நண்பரின் ஆறுதல் மொழிக் கடிதத்திற்குப் பதிலாக, சிய்யோ தந்த ஹைகூதான் இது.

**பூக்கள் இல்லாமல்**
**ஒருவர் வாழ்வு நிம்மதி**
**வில்லோ மரம்போல.**

வில்லோ மரத்திற்கு மலர் பார்க்கும் கூட்டம் தன்பால் வராதே என்ற கவலை இல்லை. மற்ற மரங்களை அடித்து நொறுக்கும் இலைகளைச் சூறையாடும் புயல்களாலும் கவலையில்லை. தன் நண்பருக்கு நேர்ந்த துயரம் அறிந்து ஓர் இரங்கல் வெளிப்பாடாக நண்பர் எழுதியிருந்த ஹொக்கு கவிதைக்கு, ஏதோ பதிலடி கொடுப்பது போல் சிய்யோ இப்படியொரு ஹைகூவை எழுதிவிட்டாரோ என்று கருதுகிறவர்களும் இருக்கிறார்கள்.

கூடுதலாக ஒரு குறிப்பு. இந்த வில்லோ மரத்திலிருந்துதான் விளையாட்டு மட்டைகள் (Cricket & Base ball) செய்யப்படுகின்றன. தலைவலிக்குச் சட்டென்று தேடும் ஆஸ்பிரின் மாத்திரைகள் வில்லோவிலிருந்துதான். அது மாரடைப்பைத் தடுக்கும். மருந்துக் குணம் உடையது என்கின்றனர்.

இன்னும் ஒன்றே ஒன்று.

ஹைகூவில் உவமை இருக்கக் கூடாது என்று ஒரு கருத்து உண்டு. அப்படியில்லை; உவமை இருக்கலாம். ஹைகூவுக்கு உயிர் தரக்கூடியதாய் என்பதற்கு இக்கவிதை ஓர் எடுத்துக்காட்டு.

## 51

**சர்யூ**

**Saryu**

(குறிப்புகள் கிடைக்கவில்லை)

The willow paints the wind
without using a brush.

**வில்லோ காற்றுக்கு**
**வண்ணமடிக்கிறது**
**தூரிகை இல்லாமலே.**

இயற்கையைக் கலைஞர்கள் ஓவியம் தீட்டுவது இயற்கை. இந்த ஹைகூவில் இயற்கை - இயற்கையை ஓவியம் தீட்டுகிறது.

வில்லோ மரம் கண்ணுக்குப் புலனாகாத காற்றில் தூரிகையில்லாமல் வண்ண ஓவியம் வடித் தெடுக்கிறது. எந்த ஓவியத்தைச் காற்றுத் தீட்டும்? ஆங்கிலத்தில் உள்ள Paint என்ற சொல்லுக்குச் சாயம் அடித்தல் என்னும் பொருளும் உண்டு. காற்றுக்கு ஏன் வண்ணம் அடிக்க வேண்டும்? இப்படி எல்லாம் நம்மைத் தடுமாற வைக்கிறது இந்த ஹைகூ.

1970களில் ஆனந்த விகடனில் ஒரு படத்துக்கு என்னைக் கவிதை எழுதச்சொல்லிக் கேட்டார்கள். மரம் காற்றில் அசைவதைக் காட்டும் அருமையான ஒளிப்படம். கிளைகளின் அசைவு இலைகளின் அதிர்வு எல்லாம் அப்படியே படத்துள் நிகழ்ந்து கொண்டிருந்தன.

நான் எழுதிய கவிதையில் குறிப்பிட்டிருந்தேன். 'இது மரத்தின் படம் அல்ல; மரத்தின் மடியில் உட்கார்ந்து காற்று எடுத்துக் கொண்ட படம்'. இந்த ஹைகூவை அப்போது நான் அறியேன்.

52

## பாஷோ

**Basho** (1644-1691)

Poor boy leaves
moon viewing
for rice grinding.

**ஏழைச் சிறுமகன்**
**நிலாப் பார்த்தலை விட்டுவிட்டுப்**
**போகிறான் மாவரைக்க...**

ஒரு சித்திரமாக வெளிப்பட்டிருக்கும் இந்த ஹைகூவில் பாஷோவின் கனிவும் இரக்கமும் - அந்தப் பையன் பக்கமாக நம் முகத்தையும் திருப்புகின்றன. வாழ்வின் எதார்த்தம் - வறுமை, உழைப்புக் கொடுமை எல்லாம் அந்தச் சிறுவனின் இளமைக் கால இன்பங்களைச் சூறையாடிக் கொண்டிருக்கும் சோகம் நிலாவின் முகத்திலும் படரத்தான் செய்கிறது.

## 53

## ரியோகன்
**Ryokan** (1756-1831)

Enough for a fire
fallen leaves
brought by the wind.

**காற்று கொணர்ந்த**
**இலைகள் போதும்**
**ஒரு நெருப்புக்கு.**

ஜென் பௌத்தத் துறவி ரியோகன் தன் விசித்திரமான நடவடிக்கைகளால் புகழ்பெற்றவர் கதைகதையாக, ஜப்பானிய மக்களால் அவை பேசப்படுகின்றன. வாக்கா வகைக் கவிதை எழுதுவதிலும், சீனமொழிக் கவிதை எழுதுவதிலும் வல்லவர் அவர்.

ஜென் துறவி ரியோகனுக்குத் தன் சிறுகுடிலின் விரிவாக்கமாகவே தோட்டம் அனுபவமாகிறது.

பற்றில் பழுத்த மக்கள் குடிலுக்குள் தோட்டத்தைக் கொண்டு வந்து பதுக்கவல்லவா முயல்கின்றனர்! ரீயோகனுக்கு என்ன தேவை? உணவாகக் கொஞ்சம் கஞ்சி வேண்டும். அதைக் காய்ச்சிக்கொள்ளக் கொஞ்சம் நெருப்பு வேண்டும். அதற்குக் கொஞ்சம் இலைகள்! இவர் எங்கும் அதற்குப் போக வேண்டாம். காற்றே கொண்டு வந்து குடில் வாசலில் தந்துவிட்டுப் போகிறது.

இயற்கையின் கொடை மிக அதிகமாகவும் இல்லை, குறைவாகவும் இல்லை. சமநிலையில் சரியாக இருக்கிறது. போதாதா?

இந்தச் சமநிலைதான் பௌத்தம்.

**54**

## ரியோகன்

**Ryokan** (1756-1831)

The moon at my window is left
unstolen by the thief.

**திருடனால்**
**திருட முடியவில்லை; என்**
**சாளர நிலா.**

ரியோகன் வீட்டில் நடந்த ஒரு நிகழ்வு. ஒருவேளை ஜென்துறவியாக அவர் மாறுவதற்கு முன்பாக இருக்கலாம்.

ஒரு நாள் திருடன் ஒருவன், அவர் வீட்டைத் திறந்து அங்கிருந்தவற்றை அப்படியே சுற்றிக்கொண்டு போய்விட்டான். இத்தனைக்கும் பகல்போல நிலா வெளிச்சம் இருந்த இரவு அது. அடுத்தநாள் காலையில் குடும்பம் கவலையில் மூழ்கியது. எல்லாவற்றையும் திருடிக்கொண்டு போய்விட்டானே என்று குடும்பம் பதறியது. கவிஞானி, ஜன்னல் நிலாவை அவனால் திருட முடியவில்லையே என்று கவிதை சொன்னார்.

55

## யாஓஹிகோ

**Yaohika** (1756-1831)

Clouds of flowers
fall not knowing
east or west.

மலர் மேகங்கள்
உதிர்கின்றன; கிழக்கா? மேற்கா?
தெரியாமலே.

இக்கவிதை ஜப்பானிய மரணக் கவிதைகள் (Japanese Death Poems) என்னும் நூலில் உள்ள ஹைகூ கவிஞர்கள் பகுதியில் உள்ளது. யாஓஹிகோ 1977இல் மூன்றாம் திங்கள் 22ஆம் நாளில் இறந்துவிட்டார். அப்போது வயது அவருக்கு 81. மலர் மேகங்கள் என்பது உதிரும் செர்ரி மலர் இதழ்களுக்குரிய பொதுவான ஓர் உருவகம்.

யாஓஹிகோ, செர்ரி மலரும் பருவத்தில்தான் இறந்தார். செர்ரி மலர்களுக்கு நேர்ந்ததைப்போலத் தனது மரணம், தனக்கு நேர வேண்டும் என்று விரும்புகிறார். காற்றில் உதிர்க்கப்படும் அம்மலரின் இதழ்களுக்கு எந்தத் திசையில் விழவேண்டும் என்ற நோக்கமோ, ஆசையோ இல்லை. எல்லாத் திசைகளும் ஒன்றே. மனிதர்கள் அப்படி இல்லை. பௌத்தச் சுவர்க்கமுள்ளதாகக் கருதப்படும் மேற்குத் திசையில்தான் மரணம் தமக்கு உண்டாக வேண்டும் என்று விரும்புவர்.

**56**

## தோயுன்
## Tojun

Even dew distilled
from a thousand herbs
can't cure his illness.

**மூலிகை ஆயிரம் பிழிந்து**
**வடிகட்டியும் அவரால்**
**முடியவில்லை தனது நோய் தீர்க்க.**

இவ்விறப்புக் கவிதையை எழுதியுள்ள தோயுன் தலைசிறந்த ஹைகூ கவிஞர் கிககுவின் தந்தை. அவரே ஒரு மருத்துவர். அவர் தனது 77ஆவது வயதில் 1695ஆம் ஆண்டின் எட்டாவது திங்கள் இருபத்தொன்றாம் தேதி இறந்தார். எழுபத்தேழு வயதான மூத்த மருத்துவர், தனக்காக விதவிதமான என்னென்னவோ மூலிகைகள் அவர் வடித்தெடுத்திருக்கிறார்; அதனால் பயனில்லை என்று தன் மரணக் கவிதையில் எழுதி வைத்தார்.

57

## பென்செகி
## Benseki

Child of the way
I leave at last;
a willow on the other shore.

**பாதையில் வந்த குழந்தை,**
**பயணம் முடிக்கிறேன்**
**மறுகரையில் உள்ளதொரு வில்லோமரம்.**

பென்செகி என்ற ஹைகூ கவிஞர், 1728ஆம் ஆண்டின் இரண்டாவது திங்கள் பதினைந்தாம் நாள் இறந்தார். 'பாதையின் குழந்தை' என்பது எண்பது வயது முதியவர் தமது இளமையைப் புதுப்பித்துக் கொள்ளும் கனவு மட்டுமில்லை. பென்செகி துறவியாகத் தனது பெயரை ஹோனி (Hony) என்று மாற்றிக் கொண்டார். சீன உச்சரிப்பிலிருந்து உருவாக்கிய Honi no chigo என்று மூலத்தில் உள்ள சொற்றொடரில் ஹோனி என்பது பாதையின் குழந்தை என்றும், தத்துவத்தின் குழந்தை என்றும் இருபொருள் தரும் தன்மையது.

மறுகரையில் - வாழ்வு முடிந்து சென்றடையும் இடத்தில் (வானுலகம் - சுவர்க்கம்) தனக்கு விருப்பமான வில்லோமரம் இருக்கிறது என்கிறார் பென்செகி. துறவு பூணினும் - சுவர்க்கம் மேவினும் மறப்பரோ மரத்தின்மீது காதல்?

முன்பு வில்லோமரம் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன் ஜப்பானில் எங்கெங்கும் நதிகளின் ஏரிகளின் கரைகளில் வளரும் நெடிய மரம் வில்லோ. அதன் மெல்லிய கிளைகள் கீழ்நோக்கிப் பரவியிருக்கும் கம்பிகள் போல.

ஹைகூ கவிதைகளில் அடிக்கடி - வசந்தகால ஓவியமாகக் குறிக்கப்படும் பசுமையும் அசையும் காற்றும் குடி கொண்டிருக்கும்.

நதியின் ஒரு கரையிலிருந்து மறுகரைக்குச் செல்வது என்பது அறியாமையிலிருந்தும் மாயையிலிருந்தும் விடுபட்டு ஞானத்தை அடைவதற்குக் குறியீடாகப் பௌத்த இலக்கியங்களில் இடம்பெறும்.

58

## பகோ
## Baiko

The plum petals falling
I look up the sky
a clear crisp moon.

**பிளம் இதழ்கள் விழ**
**விழி உயர்த்தி விண் பார்க்கிறேன்**
**தெளிந்த புத்தம்புது நிலா.**

பகோ 1903 பிப்ரவரித் திங்கள், தனது அறுபதாவது வயதில் இறந்தார். இறக்கும்போது எழுதிய மரணக் கவிதை இது.

ஜப்பானிய மொழியில் UME என்பது பிளம் மரத்தின் ஒருவகை. சீன ஜப்பானிய இலக்கியங் களில் முக்கியமான ஓரிடத்தைப் பெற்றிருப்பது. தொல் ஜப்பானிய இலக்கியத்தில் பூவென்று சொன்னாலே அது, பிளம் பூவைத்தான் குறித்தது. காலப்போக்கில், பிளம் இருந்த இடத்தை, செர்ரி கைப்பற்றிக் கொண்டது. ஜப்பானிய தொல் மரபு, நம் நாட்டில் கோயில் தலவிருட்சம் என்கிறார்களே அப்படிப்பட்ட ஒரு புனிதத் தன்மையோடு பிளம் மரத்தைப் போற்றியிருக்கிறது.

பொதுவாக எங்கும் உள்ள பிளம் மரத்துப் பூக்கள் வெண்மை நிறமுடையவை கொள்ளை மணத்தைக் கொட்டுபவை

மனத்தில் உள்ள விருப்பு, வெறுப்புகள், எண்ணங்கள், அலைவுகள், அசைவுகள் எல்லாம் இலைகள் போல உதிர வேண்டும். இவையெல்லாம் ஆன்மா தேடும் உண்மையை மறைப்பவை. மறைத்துக் கவர்ச்சியால் தம்மை

மட்டும் காணும்படி, கவனிக்கும்படி கட்டளை போடுபவை. ஒளி நிறைந்த மதியைத் தேடிக் கவிஞர் எல்லாவற்றையும் உதிர்த்துக் கொள்கிறார். அவருக்குக் கிடைக்கிறது, தெளிவான இயக்கம் உள்ள நிலா. இப்படி விளங்கிக் கொள்ளவும், விளக்கிச் சொல்லவும் - எல்லையற்ற தன்மையோடு இந்த ஹைகூ.



59

## ஒட்சுஇன்
## Otsuin

Hidden among the roots
of grass I hear
a cuckoo.

**புல்லின் வேர்களிடையே**
**புதையுண்ட என்செவியில்**
**ஒரு குயில் குரல்.**

ஒட்சுஇன் 1807ஆம் ஆண்டு நான்காம் திங்க
25ஆம் நாள் இறநதார். அவர் வய
தெரியவில்லை.

ஒட்சுஇன் எழுதியுள்ள இம்மரணக் கவிதையி
அவர் குரலும் ஒலிக்கிறது. ஒரு குயிலின் குரலு
ஒலிக்கிறது. புதையுண்ட சிலர், நம் நாட்டில் மது
கோப்பைகளின் ஓசையைக் கேட்கிறார்கள். சில
மங்கையரின் கொலுசோசை கேட்கிறார்கள். சில
உருண்டோடிடும் பணம் காசுகளின் ஓ
கேட்கிறார்கள். இப்படி இப்படி எவ்வளவோ பே
எவ்வளவோ வகைகளில்!

ஒட்சுஇன் புதையுண்ட பிறகும் கேட்பது ஒ
குயிலோசை, இசையில், இயற்கையில், மரண
மகத்துவம் பெறுகிறது.

ஒட்சுஇன், தெற்காசியாவிலிருந்து ஜப்பானுக்கு
குயில்கள் புலம்பெயர்ந்து வரும் சூன் மாத
தொடக்கத்தில் இறந்தார். அந்தப் பருவத்தில் குயி
காற்றில் தனது இசையினிமையைக் கலந்
பரிமாறி, கேட்பவர்களைக் கிறுகிறுக்க வைப்பதை
அனுபவித்தவர் ஓட்சூயின். எனவே
மரணத்தையும் குயிலின் இசை மடியில் வைத்து
தாலாட்டுகிறார் கவிஞர்.

இக்கவிதையில் புல்லின் வேர்களிடையே புதையுண்டு என்பது மரணத்தின்பின் உள்ள நிலை பற்றிய ஒரு மயக்க உணர்வு என்றுதான் சொல்ல வேண்டும். பெரும்பாலான ஜப்பானியர்கள் இறந்தவர்களைப் புதைப்பதில்லை. எரித்து விடுகிறார்கள். ஆனால் நிலத்தடியில் அவர்களை நிறுவுவது ஓர் இலக்கியப் படிமமாகத்தான் இருக்கிறது.

60

## கியோசு
## Kyoshu

A journey of no return
the wanderer's sack is
bottom less.

திரும்பி வராத பயணம்
யாத்திரிகன் கோணிப்பை
அடிப்பகுதி இல்லாதது.

1769ஆம் ஆண்டு, 6ஆவது திங்கள், 16ஆ
நாள் தனது எண்பதாவது வயதில் கியோ
இறந்தார். கியோசுவின் மரணக் கவிதை ஜெ
பௌத்த இலக்கிய எழுத்துக்கள் சொல்லும் 'நா
எங்கிருந்தும் வரவும் இல்லை எங்கும் போகவ
இல்லை' என்ற தத்துவ முத்திரை பதித்கிறது.

அடிப்பக்கம் தைக்கப்படாத கோணிப்பை கூ
ஜென் உணர்வைப் பிரதிபலிக்கக் கூடிய
யாத்திரிகன் உணர்வு, வாழ்வு, மரணம் என்னு
கருத்துக்களிலிருந்து விடுபட்டிருக்கிறது.

அடிப்பக்கம் மூட்டித் தைக்கப்படாதகை
போன்றதுதான் வாழ்க்கை. ஆலாய்ப் பறந்
தேடித்தேடிப் பையை நிரப்பினாலும் ஏதும் நிற்க
போவதில்லை. வாழ்க்கையே அப்படித்தா
கொண்டு வந்ததுமில்லை; கொண்
போவதுமில்லை.

## 61

## பைக்கா
## Baika

People when you see the smoke
do not think
it is fields they are burning.

புகை பார்க்கும்போது மக்களே!
நினைத்துவிட வேண்டாம்
அவர்கள் எரிப்பது வயல்கள் என்று.

1843ஆம் ஆண்டு மூன்றாவது திங்கள், மூன்றாம் நாள், எழுபதாம் வயதில் இறந்தபோது பைக்கா எழுதிய ஹைகூ.

ஜப்பானில் வசந்தத்தின் தொடக்கத்தில் காற்று வீசாத நாளில் மாரிக்காலத்தில் மண்டி வளர்ந்த புதர்களையும் களைகளையும் - மக்கள் ஒன்று சேர்ந்து எரிப்பது வழக்கம். அப்படி எரிப்பதால் ஒருவகையில் சாம்பலாகி எருவாகப் பல உருமாறுகின்றன. பயிர்களைப் பாழாக்கும் பூச்சிகள் கொல்லப்படுகின்றன. நுட்பமாக இங்கு பைக்கா குறிப்பிடுவது, தனது உடல் எரிக்கப்படுவதால் எழுகிற புகையை, தவறாக மக்கள் பயிர் எரிக்கும் புகையாக எண்ணிவிட வேண்டாம் என்பதைத்தான்.

உணவு விடுதியொன்றின் அறையில் கவிதைத்தனமாக எழுதப்பட்டிருந்த அறிவிப்பைக் குறிப்பிட விரும்புகிறேன்.

விடுதி அறையில் படுத்துக் கொண்டே புகைபிடிக்க வேண்டாம் என்பதை, தங்குவோர்க்கு எச்சரிக்கிறார்கள் - எப்படி?

படுத்துக் கொண்டே
புகைபிடிக்காதீர்கள்
உதிருவது உங்கள் சாம்பலாகவும் இருக்கலாம்.

62

## மாசாஹைடு
## Masahide

While I walk on
the moon keeps space beside me
friend in water.

நான் நடக்கும்போது
நடந்து வருகிறது கூடவே நண்பனாக
நீரில் நிலா.

1723ஆம் ஆண்டு எட்டாவது திங்கள், மூன்றாம் நாள், தனது அறுபத்தேழாம் அகவையில் இறந்தார் மாசாஹைடு.

'இறுதி வரை யாரோ?' வினா நமக்குப் புதிதில்லை. நீரில் பிம்பமாய் - அது ஓடையா, ஏரியா தெரியவில்லை. ஆனால் கவிஞர் மாசாஹைடு நடக்கும்போது துணையாக நிலா வந்து கொண்டிருக்கிறது. பிம்பங்கள் பொய்ம்மை யானவை. அவற்றின் மூலங்கள் - துணையாக வருவதில்லையா! உயரத்தில் இருக்கும் நிலா பிம்பமாய் மட்டுமே - இப்போது துணைய்ாக எப்படியேனும் வரமுடிகிறது. உறவில், நட்பில், உலகில் இருக்கும் யாருமே இல்லையா? இப்படி அடுக்கு அடுக்காக உணர்வுகளை எழுப்பும் அழகிய மரணக் கவிதை இது.

மாசாஹைடு பொருள்களைச் சேர்த்து வைத்திருந்த கிடங்கு, 1688 வாக்கில் தீப்பற்றி எரிந்து போனது. அப்போது அவர் எழுதிய கவிதை ஆசான் பாஷோவால் மிகுதியாகப் புகழ்ப்பட்டது.

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார் என்று மாசாஹைடைச் சொல்லலாமா?

63

## மாசாஹைடு
## Masahide

Now that my store house
has burned down, nothing
conceals the moon.

என் சரக்குக் கிடங்கு
எரிந்து விழுந்தது இப்போது
எதுவும் நிலாவை மறைக்கவில்லை.

மாசாஹைடுவின் இக்கவிதையின் சிறப்புக் கருதி, அவர் எழுதியுள்ள மரணக் கவிதை 'ஜப்பானிய மரணக் கவிதைகள்' நூலில் இடம் பெற்றிருக்கிறது.

எதையும் இயல்பாக ஏற்றுக்கொள்ளுதல், இன்பத்தில் இன்பம் என்றில்லை, எனவே துன்பத்தில் துன்பம் என்றில்லை. எல்லாம் சமமே என்னும் ஜென் மனநிலை. இழப்பிலும் பெறுவதற்கு ஏதோ ஒன்று இருக்கலாம். இழப்புகளால்தானே மனிதன் இதயம் ஒடிந்துபோகிறான். விதையை இழந்தால்தான் பயிர்; அரிசியை இழந்தால்தான் சோறு. இதோ இப்போது கவிஞர் சரக்குக் கிடங்கு எரிந்து சாம்பலானது. நிலாவைப் பார்க்க முடியாமல் மறைத்துக் கொண்டிருந்தது விழுந்துவிட்டது. நிம்மதியாக நிலாப் பார்க்கலாம். திரைகள் விழவேண்டும். திரைகளில் சொக்கி மயங்கி விடக்கூடாது.

மாசாஹைடுவின் கிடங்கு தீப்பற்றி எரிந்து சாம்பலான பிறகு அவர் மிகவும் ஏழையாகி விட்டதாகத் தெரிகிறது. அவருடைய நண்பரும் கவிஞருமான ஜோஜன்: 1763இல் அவரைப் பார்க்க வந்தார். அவர் சொன்னார் "மாசாஹைடு தன் இரண்டு குழந்தைகளுக்குப் போர்வைகூட இல்லாமல் கொசுவலையால் போர்த்தியிருந்தார்".



64

## கிஜன்

**Kizan** (-1851)

When I'm gone
will some one care for
the chrysanthemum I leave.

**நான் போய்விட்டால**
**நான் விட்டுப் போகும் கிறிசாந்தமத்தை,**
**யாரேனும் கவனித்துக் கொள்வார்களா?**

1851ஆம் ஆண்டு பன்னிரண்டாம் திங்கள் நான்காம் நாள் தனது அறுபத்து நான்காம் வயதில் கிஜன் இறந்தார்.

"நான் போனதற்குப் பிறகு என் பெண்டு பிள்ளைகளை யார் காப்பாற்றுவார்கள்? என் குடும்பம் நிர்க்கதியாக நின்றுவிடுமா? என் சொத்துப் பத்தெல்லாம் தொலைத்து விடுவார்களா? யாரேனும் அள்ளிக் கொள்வார்களா? இப்படித்தான், கண்ணை மூடும் நேரத்தில் பலருக்குக் கவலைகள்! ஐயங்கள்! ஆனால் ஹைகூ கவிஞர் கிஜனின் கவலை இப்படியில்லை. நான் விட்டு விட்டுப் போகிறேனே, இந்தக் கிறிசாந்தமம், இதை யாரேனும் காப்பாறுவார்களா? பாவம்! கவனிப்பாரற்று என் கிறிசாந்தமம் அழிந்துபோகுமா? நான் விட்டுப்போகும் கிறிசாந்தமம் என்பதில் வெளிப்படுகிற அந்த மரத்தோடான உயிர் உறவு படிப்பவரைச் சிலிர்க்கச் செய்யும்.

விட்டுப் போகும் கிறிசாந்தமம் அல்லது எனக்குப் பின்னிருக்கும் கிறிசாந்தமம் என்பதில் இலையுதிர்காலத்து இறுதியில் இன்னும்கூடப்

பூக்கும் கிறிசாந்தமம் என்கிற பொருள் ஆழம் இருக்கிறது. உண்மையில் இது ஹைகூ கவிஞர் கிஜனுக்குத்தான் இலையுதிர்காலம் போலும்!

மற்றவையெல்லாம் உதிர்ந்த பிறகும், தோட்டத்துக்கு உரியவன் இறந்தபிறகும், கிறிசாந்தமம் பூத்துக் குலுங்குவதைத் தொடரும்தான். யாரோடு நட்புக் கொள்ள முடிகிறதோ இல்லையோ, ஒரு மரத்தோடு நட்பு வைத்துப் பாருங்கள், உங்களுக்குள் ஒரு கிஜன் வளர்வார்.

## 65

### இசா

**Issa** (1763-1827)

What matter if I live on
a tortoise lives
a hundred times as long.

**இன்னும் நான் வாழ்வதில் என்ன இருக்கிறது**
**ஆமை வாழ்கிறது**
**நூறு மடங்கு அதிகமாக.**

ஜப்பானின் மிகச் சிறந்த ஹைகூ கவிஞர்களில் ஒருவர் இசா. ஜப்பானியப் பொதுமக்கள் மற்ற எந்தக் கவிஞரையும் விட இசாவை மிகுதியாக நேசித்தனர். வாழ்வின் எதார்த்தங்களைப் பாடினார். கவிதைகளில் மானுட எளிமையை வெளிப் படுத்தினார். ஆமைகள் பத்தாயிரம் ஆண்டுகள் வாழும் என்பது கீழ்த்திசை நாடுகளின் நம்பிக்கை. கவிதைக் குறியீடுகளைப் பொறுத்தவரை கொக்குகளும், ஆமைகளும் நீண்ட ஆயுளுக்குக் குறியீடு ஆமைகள், பாதுகாப்பான பயணத்துக்கும் குறியீடு.

எதற்கு மனிதன் நீண்ட காலம் வாழத் துடிக்கிறான்? நூறு ஆண்டுகள் அவன் வாழ்ந்தால்கூட, ஓட்டுக்குள் உடம்பை வைத்து, வாலை இழுத்துக் கொண்டு சேற்றில் போகிற ஆமையின் பத்தாயிரம் ஆண்டு வாழ்க்கையோடு ஒப்பிட்டால் அதற்கு என்ன பெருமை? பிறகு, எதற்கு இன்னும் ஓர் ஆண்டு - இன்னும் ஒரு மாதம், இன்னும் ஒரு நாள், என்று சாவைத் தள்ளிப்போட முடியாதா என்று தவிக்கிறான் மனிதன்?

## 66

# கோஹெய்

**Gohei** (-1819)

A lone paulownia leaf
falls through
pure autumn air.

**தன்னந் தனிப் பொலோனியா**
**இலை ஒன்று உதிர்கிறது**
**இலையுதிர் பருவத் தூயகாற்றில்.**

கோஹெய் 1819ஆம் ஆண்டு, ஏழாம் திங்கள், ஏழாம் நாள் இறந்தார். பொலோனிய மரம் பற்றி ஏற்கெனவே சில குறிப்புகளைப் பார்த்தோம்.

தன்னந்தனியான பொலோனிய இலை என்பது தொல் சீனக் கவிதையில் இலையுதிர்காலத்து முதற்பகுதிக்கு ஒரு பருவக் குறியீடாக இடம் பெற்றுள்ளது. இலையுதிர் காலக் காற்றின் உதவியில்லாமலே பொலோனியா மரத்தின் பெரிய பெரிய இலைகள் ஒவ்வொன்றாய் விழுந்துவிடும். இந்தக் காட்சி எதைக் குறிப்பால் உணர்த்துகிறது? இலையுதிர்காலத் தொடக்கத்தையும் வாழ்வின் முடிவு நாள் நெருங்குவதையும்தான்.

**67**

## பாய்செகி
## Baiseki

Island of Eternity
a turtle dries shell out
in the first sunrays of the year.

**அமரத்துவத் தீவு**
**ஆமை ஒன்று தனது ஓடு உலர்த்தும்**
**ஆண்டு முதல் நாள் சூரிய ஒளியில்.**

பாய்செகி 1745ஆம் ஆண்டு, முதல் திங்கள், முதல் நாள் முடிந்து போனார். பாய்செகியின் ஜப்பானிய மூலக் கவிதையில் உள்ள ஓராய் (Horai) என்பது சீனத்தொன்மக் கதையின்படி சுவர்க்கத் தீவுகளில் உள்ள மூன்று மலைகளில் ஒன்றைக் குறிப்பது. அங்கேதான் இறப்பிலா வாழ்வின் மறைவுண்மைகள் இருப்பதாக ஒரு நம்பிக்கை.

ஜப்பானைப் பொறுத்தவரை அச்சொல் விதவிதமான புத்தாண்டு உணவுகளையும், அழகுப் புனைவுகளையும் குறித்து ஏதாவது ஒரு வழியில் நெடுநாள் வாழ்வோடு தொடர்புடையதாக இருக்கிறது. ஆமை நெடிய வாழ்வுக்கு ஒரு குறியீடாகி, சீன - ஜப்பானிய ஓவியங்களில் இடம்பெற்றுள்ளது. தண்ணீரின் மேற்பரப்பில் அது நீந்துவதாகவும், தன் முதுகின்மீது ஓராய் மலையைச் சுமந்து கொண்டிருப்பதாகவும், இக்காரணத்தால்தான் புத்தாண்டு அலங்காரங்களில் ஆமை, இன்றியமையாமை உடையதாக இடம் பெற்றுவிட்டதாகவும் ஜப்பானியம் தெரிவிக்கிறது.

புத்தாண்டு முதல் நாள் காலைச் சூரிய ஒளி

காண்பது ஜப்பானியர்கள் வாழ்வுப் பண்பாட்டு மரபு. எங்கே தூங்கி விடுவோமோ காலை முதற் கதிரைக் காணாது போய் விடுவோமோ என்கிற துடிப்பில் இரவெல்லாம் தூங்காமல் இருப்பர் ஜப்பானியர். பாய்செகி, தூங்காமல் இருந்து புத்தாண்டுப் புலரியில் கதிரவன் முதல் கதிரொளி காண்பாரா? ஆமை அலங்காரத்தைத் தன் வீட்டில் பார்த்தாரா? தொன்மக் கதைப்படி சூரிய ஒளியில் தகதகக்கும் கடலின்மீது அமரத்துவத் தீவைச் சுமந்து வந்த ஆமையைக் கண்டாரா?

தெரியவில்லை.

68

## ஜென்ஜென் இசி
## Gengen Chi

Morning glory
even though you wither
dawn will break a new.

**காலைக் கீர்த்தியே**
**காய்ந்து நீ வாடினும் விடியல்**
**இன்னொரு மொட்டவிழ்க்கும்.**

ஜென்ஜென் இசி - 1804ஆம் ஆண்டு, எட்டாம் திங்கள், இருபத்தைந்தாம் நாள் இறந்தார். ஜென்ஜென் இசி குழந்தைப் பருவத்திலேயே பார்வையை இழந்தார். அவருடைய மனைவியும் குழந்தைகளும் எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்தனர்.

பார்வை நலமில்லாத இப்பாவலர் காலைக்கீர்த்திக் கொடியின் மலர் தொட்டுப் பார்த்திருப்பார். அது வாழ்வு வளம் இழந்து மரண வாயிலை நெருங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்திருப்பார். அதற்கு ஆறுதல் சொல்லியிருப்பார் - வைகறை இன்னொரு பூவை வழங்கும் என்று.

(morning glory) காலைக் கீர்த்தி என்று சொல்லப்படும், இவர்கொடி அதாவது மேலேறி வளரும் கொடி (asagao) வெவ்வேறு வண்ணங்களில் ஆகஸ்டு மாத வாக்கில் பூக்கும். (தரையில் பரவி வளரும் கொடிக்குப் படர்கொடி (creeper) என்பது பெயர்). காலைக் கீர்த்தியின் மலர்கள் வைகறையில் மலர்ந்து அன்றைய பிற்பகலிலேயே உதிர்ந்துவிடும். அதனால் ஜப்பானியர்கள் 'காலைமுகம்' என்றே இதனை

அழைப்பர். மிகக் குறைவான நேரமே வாழ்ந்து முடியும் காலைக் கீர்த்தி நிலையாமைக்கு ஒரு குறியீடாக வழங்கப்படுகிறது. இலையுதிர்காலத் தொடக்கத்தில் இக்கொடியின் பூக்கும் பருவம் முடிந்துவிடுகிறது. ஜென்ஜென் இசி இறந்தது. அந்தப் பருவத்தில்தான்.

'தான் உதிர்ந்தால் இன்னொரு பூப்பூக்கும்' என்று அவரும் நமக்கு நம்பிக்கையூட்டுகிறார்.

## 69

### சாய்பா
### Saiba

I shift my pillow
closer to the
full moon.

**முழு நிலாவுக்கு நெருக்கமாக**
**எனது தலையணையைத்**
**திசை மாற்றினேன்.**

1858ஆம் ஆண்டு எட்டாவது திங்கள், பதினைந்தாம் நாள் சாய்பா தனது ஐம்பத்தோராம் வயதில் காலமானார். இலையுதிர் கால முழு நிலா நாளில் சாய்பா தனது இறுதிநாள் ஒளியில் தோய்ந்தார். பூமியில் நிலாப் பார்த்தல் முடிகிறது கவிஞருக்கு.

எந்தச் சாளரத்து வழியாக முழு நிலா சுடர்விடுவதைக் கவிஞர் கவனித்தாரோ - கவனித்துக் கடைசி நொடிகளுக்கு விடை கொடுத்தாரோ, அந்தச் சாளரப் பக்கமாகப் படுக்கையை மாற்றிக் கொண்டார்.

## 70

## ரங்காய்
## Rangai

I wish to die
a sudden death with eyes
fixed on mount fuji.

**கண்கள் ஃபுஜி மலைமேல்**
**பதிந்திருக்க நான் திடீரென்று**
**கண் மூட வேண்டும்.**

1845இல் மூன்றாம் மாதம், இருபத்தாறாம் நாள் ரங்காய் இறந்தார். நிலாப் பார்த்தபடி இறந்த கவிஞர், சாய்பாவின் இறப்புக் கவிதையைப் பார்த்தோம். மலையைப் பார்த்தபடியே மறைய விரும்பும் ஹைகூ கவிஞர் இவர்.

ஒருவர் இறக்கும்போது, அவருக்கு மிக நெருக்கமானவர்கள் தன்னைச் சூழ்ந்திருக்க வேண்டும் என்கிற விருப்பம்தான் இருக்கும்; இது இயற்கை. வெளியூரில் இருந்தால்கூட நிலைமை கவலைக்கிடம் என்று தந்தி கொடுத்தோ, தொலைபேசியில் செய்தி கொடுத்தோ அவர் காண வேண்டியவரை உடனே வரச் செய்வர்.

எதிர்பாராமல் திடீரென்று இறந்துவிட்டால் என்ன செய்வது? ரங்காய், எச்சரிக்கையாகத் தெரிவித்துவிடுவது போல உள்ளது இந்த ஹைகூ ஃபுஜி மலையைப் பார்த்தபடியே தான் மரணித்துவிட வேண்டும் என்பது அவருடைய விருப்பம். அதுவும் அங்கும் இங்கும் நகராதபடி தனது பார்வை தனக்கு விருப்பமான அந்த மலையைப் பார்த்திருந்தபடியே தனது உயிர் போக வேண்டுமாம். மலைமீது அப்படி ஒரு மலையளவு

காதல். ஃபுஜி மலை புனிதத் தன்மை உடையது என்று ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகக் கருதப்பட்டு வந்தது. இலக்கியத்திலும் கலையிலும் இடம்பெற்ற இம்மலை, பெண்கள் ஏறி வருவதை நெடுங்காலமாக ஏற்கவில்லை. இப்போது ஒவ்வோர் ஆண்டும் 3,00,000 மக்கள் ஃபுஜி உச்சி சென்று உவகையின் உச்சியைத் தொடுகின்றனர்.

சீனப் பெருந்தலைவன் மாவோ மரணம் நேர்ந்தால் அது பூஞ்சிறகு உதிர்வது போல இருக்கக்கூடாது. தை மலையின் தாக்கமாக இருக்க வேண்டும் என்று குறிப்பிட்டதை இங்கு நாம் எண்ணிப் பார்க்கலாம்.

## 71

## என்செய்

**Ensei** (-1725)

A parting gift to my body
just when it wishes
I will breath my last.

**என் உடலுக்கு விடைபெறு பரிசு**
**அது விரும்பும்போது விடுவேன்**
**என் கடைசி மூச்சு.**

1725ஆம் ஆண்டு ஐந்தாம் மாதம், 16ஆம் நாள் தனது 65ஆம் வயதில் இறந்தார் ஹைகூ கவிஞர் என்செய்.

உடம்பு - மனிதன் விருப்பங்களை நிறை வேற்றுகிறது. கட்டளைகளுக்குப் பணிகிறது. மனிதன், நட என்று கட்டளை போட்டால், வலியோடுகூடக் கால்கள் நடக்கும். என்ன உண்ண வேண்டும், என்ன பருக வேண்டும் என்று மனிதன் விரும்பினாலும், கை எடுத்துக் கொடுக்கிறது, வாய் திறக்கிறது, பற்கள் மெல்லுகின்றன. நாக்கு, சுவையுணர்வை நிறைவேற்றுகிறது. எழு என்றால் எழுகிறது. படு என்றால் படுக்கிறது. இப்படியெல்லாம் விருப்பத்தை நிறைவேற்றியும் கட்டளைக்குப் பணிந்தும் நடக்கும் உடம்பைப் பற்றி ஒரு நாளில் ஒரு மணி நேரம்கூட மனிதன் சிந்தித்துப் பார்ப்பதில்லை.

என்செய் பரிசுகள் வழங்கியும் வாங்கியும் பழக்கப்பட்ட வாழ்க்கையை எண்ணியவராக - 'நான் இந்த உடலை விட்டுப் போகும்போது, இதுவரை நான் வாழ்வதற்கு இடம் தந்து ஆதரித்த

இந்த உடம்புக்கு நான் என்ன பரிசு தர முடியு
அது விரும்புகிற நேரத்தில் நான் கடைசி மூச்சை
விடுவேன் என்பதைத் தவிர' என்கிறார்.

ஜப்பானியரிடையே இப்படியொரு பழக்கம் உண்
அதாவது மூப்பு முற்றுகையிட்ட வயதின் இறு
நாள்களில் நண்பர்கள், உறவினர்க
எல்லோருக்கும் அவர்கள் தமது வாழ்வி
இறுதியாண்டில் காட்டிய அன்புக்கு நன்
செலுத்தும் வகையில் பரிசுப் பொருள்க
அனுப்புவார்களாம். அதற்கு ஜப்பானிய மொழியி
சிய்போ (Seibo) என்று பெயர்.

இங்கு, என்சீய் தனது வாழ்நாள் எல்லாம் உதவி
தனது உடம்பு, சிய்போவாக, அது விரும்புகி
நேரத்தில் தனது ஆன்மாவிலிருந்து விடுபட்டு
போகலாம் என்கிறார்.

'உடம்பார்' என்று திருமூலர், உயிரார்க்கு நிகரா
பொய்யான காயத்தை உயர்த்தி வைத்தது பொரு
இல்லாமலா?

## 72

## சோகோ

## Choko

This final scene I'll not see
to the end my dream
is fraying.

**இந்த இறுதிக் காட்சி**
**இறுதிவரை நான் காணமாட்டேன்**
**தேய்கிறது என் கனவு.**

சோகோ 1731ஆம் ஆண்டு பத்தாவது திங்கள், இரண்டாம் நாள், தனது நாற்பத்து ஆறாவது வயதில் மரணமடைந்தார்.

சோகோ தனது வாழ்க்கையின் இறுதியாண்டில் வசந்தம், கோடை ஆகிய மூன்று பருவங்களைக் கடந்தார். நான்காவது பருவமான குளிர்காலத்தின் இரண்டாவது நாளில் இறந்துவிட்டார். இறுதிக்காட்சி என்று சொல்லி, சோகோ, வாழ்க்கை ஒரு நாடகமே என்கிற கருத்தை நம் மனத்தில் பதிய வைக்கிறார். இறுதிக் காட்சியில்தான் கதையின் முடிவு. கைதட்டச் சொல்லும், இல்லாவிட்டால் கண்ணீர் கொட்டச் சொல்லும். மனித வாழ்க்கை நாடகம் - கண்ணீர் கொட்ட வைப்பதுதான் கதை வளர்ந்த விதம் எப்படி இருந்தபோதிலும். கடைசிக் காட்சியில் என்ற தொடரில் இன்னொரு நுட்பமும் இருக்கிறது: ஜப்பானிய நம்பிக்கை. மனித வாழ்க்கை ஐம்பது வயதுகளை உடையது.

சோகோ 46ஆம் வயதிலேயே இறந்ததால் நான்கு வயதுகளை இழந்தவராகி வாழ்க்கையின் முழு நாடகத்தையும் காண முடியவில்லை. இந்நிலையில் அவருடைய கனவோ தேய்கிறது. கனவு என்னவோ?

***உலகெ லாமோர் பெருங்கன வஃதுள்ளே***
***உண்டு றங்கி இடர் செய்து செத்திடும்***
***கலக மானிடப் பூச்சிகள் வாழ்க்கையோர்***
***கனவி னுங்கன வாகும்***

என்று பாடுகிறார் நம் மகாகவி பாரதி.

73

## ஹொகுசாய்
## Hokusai

Now as a spirit
I shall roam
the summer fields.

**ஆவியாக இப்போது**
**அலைந்து நான் திரிவேன்**
**கோடை வயல்களில்.**

ஹொகுசாய் 1849ஆம் ஆண்டு நான்காம் திங்கள், பன்னிரண்டாம் நாள் இறந்தபோது அவருடைய வயது 90.

ஹொகுசாய் சிறந்த கவிஞர் மட்டுமில்லை, ஜப்பானின் தலைசிறந்த ஓவியருமாவார். ஈடோ நகரத் தெருவாழ்வை மிக உயிர்ப்போடு சித்திரித்தவர். அது யுகியோயி பாணி ஓவியம் என்கின்றனர். ஃபுஜி மலையை முப்பத்து ஏழு கோணங்களில் பார்த்து அவர் படைத்த ஓவியப் புகழ் அந்த ஃபுஜி மலையின் புகழுக்கு ஏறத்தாழச் சமமானது என்கின்றனர் விமர்சகர்கள்.

ஜப்பானியப் பண்பாட்டு, நம்பிக்கை மரபுகளில் ஒன்று, இறந்துபோனவரின் ஆவி உருவம் பற்றியது. உயிர் உடம்பை விட்டுப் பிரியும்போது, அது வெளிறிய நீலநிறப் பந்து வடிவத்தில் காற்றில் உருண்டு செல்லுமாம். எந்த வீட்டில் உயிர் போனதோ அந்த வீட்டுப் பக்கத்தில் நாற்பத்து ஒன்பது நாள்கள் அது தங்கியிருக்குமாம்.

நம் நாட்டு நம்பிக்கைகளும் இப்படி எல்லாம் உண்டுதானே? கவிஞர், ஓவியர் ஹொகுசாய் தான் உயிர் நீத்த பின் தான் வாழ்ந்த வீட்டை நெருங்கித் தங்காமல் கோடை வயல்களில் ஆவியாகி அலைந்து திரியப்போவதை விரும்புகிறார்.

74

## கங்கா
## Kanga

A chill
my soul turns into
an icon.

**ஒரு குளிர் நடுக்கம்**
**என் உயிர்**
**ஓர் உருவச் சிலையாகிறது.**

கங்கா 1812ஆம் ஆண்டு இறந்தார். பிறப்பு. வாழ்வு குறித்த மற்றக் குறிப்புகள் இல்லை.

உருவச்சிலை என்று பொருள் கொள்ள வாய்ப்பாக ஜப்பானியச் சொல், காஜோ (Gazo) மூலக்கவிதையில் இடம் பெற்றுள்ளது. அதற்கு உருவச் சிலை, அல்லது உருவப்படம் என்று பொருள் உண்டு. அது பௌத்தத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். ஆனால் அப்படித்தான் இருக்க வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. வெப்பமும் இயக்கமுமான உலகிலிருந்து மாறுநிலை அடைகிற ஓர் படிமமாகக் கொள்ளலாம். அவ்வுலகிலிருந்து மாறிச் சில்லிட்டு உறையும் இயக்கமற்ற நிலையைக் குறிப்பதாகவும் கருதலாம்.

**75**

## சோஃபு
## Sofu

Festival of souls
yesterday I hosted them
today I am a guest.

**ஆன்மாக்களின் திருவிழா**
**அவர்கள் நேற்று எனக்கு விருந்தினர்**
**அவர்களுக்கு நான் இன்று விருந்தினன்.**

சோஃபு 1891ஆம் ஆண்டு, மே மாதம் 24ஆம் நாள் இறந்தார். வயது 60.

ஜப்பானியர்கள் திருவிழாக்களில் ஒன்று ஆன்மாக்களின் திருவிழா. ஜப்பான் மொழியில் Bon Festival அல்லது Tamamatsuri என்று குறிப்பிடப்படும் இவ்விழா நடுக்கோடைக் காலத்தில் கொண்டாடப்படுவது. பௌத்த விடுமுறை நாள். கன்பூசிய உணர்வு உட்பொதிந்த இவ்விழா, இறந்த முன்னோர்களை வழிபடும் நாளாக சிண்டோநெறியின் உட்கூறுகளையும் கொண்டதாக உள்ளது.

விடுமுறை நாளில் ஜப்பானியர்கள் தங்கள் சொந்த ஊருக்குத் திரும்பி, குடும்ப அடக்கத் தலத்திற்குச் சென்று இறந்த முன்னோர்கள் ஆன்மாவின் அமைதிக்காக வழிபடுவார்கள். புத்தாண்டுத் தினம்போல ஆன்மாக்களின் திருவிழாவின் போதும் இறந்தவர்களின் ஆவிகள் தங்கள் முன்னோர்கள் வீடுகளுக்குத் திரும்பி வந்து, அவர்கள் எப்படி இருக்கிறார்கள் என்று பார்க்குமாம். அவர்கள் வருகைக்கும் புறப்பாட்டுக்கும் ஜப்பானியக் குடும்பங்கள் தகுந்த ஏற்பாடுகள் செய்யுமாம்.

இங்கு சேஃபுவின் ஹைகூ கவிதை, அவர் மரணத்தை வெகு இயல்பாக எதிர்கொள்வதை எடுத்துச் சொல்கிறது. விருந்தாளிகளை வரவேற்பவன், விருந்தாளியாகப் புறப்பட்டுப் போகிறான். அவ்வளவுதான். இதில் மரணம் என்றால் அஞ்சுவதற்கு என்ன இருக்கிறது?

## 76

## பாஷோ
## Basho

On a journey, ill;
my dream goes wandering
over withered fields.

பயணத்தில் நோய்
என் கனவு அங்குமிங்கும் அலைகிறது
வறண்ட வயல்கள் மீது.

பாஷோ 1694ஆம் ஆண்டு பத்தாவது திங்கள், பன்னிரண்டாம் நாள், தனது ஐம்பத்தொன்றாம் வயதில் இறந்தார். மாபெரும் ஹைகூ கவிஞரின் கடைசிக் கவிதை இது. ஒரு பயணத்தின்போது பாஷோ கடுமையான நோய்க்கு உள்ளானார். அவருடைய மாணவர்கள் தங்கள் ஆசானிடம் ஒரு விடைபெறு கவிதை எழுதிவிட்டுச் சொல்ல வேண்டும் என்று வேண்டினர். படுத்திருந்த பாஷோ சொன்னார்: "என்னுடைய எந்தக் கவிதையும் மரணக் கவிதையாக இருக்கமுடியும்" என்று. ஆனாலும் மாணவர்கள் விருப்பத்தைப் புறக்கணிக்காமல் பாஷோ இந்தக் கவிதையை எழுதினார். அதன் பின்னர் நான்கு நாள்கள் உயிரோடிருந்தார்.

அவருடைய கனவுகள் அலைந்து திரிய வறண்ட வயல்களே கிடைத்தன. ஆனால் அவருடைய ஹைகூ கவிதைகள் ஆயிரம் பல்லாயிரம் நெஞ்சங்களில் இன்னும் பசுமையாய் வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

## 77

### பூசன்
### Buson

Of late the nights
are dawning
plum blossom white.

**அண்மைக் காலமாய் இரவுகள்**
**விடிகின்றன**
**பிளம் மலர்களின் வெண்மையாய்.**

1783ஆம் ஆண்டு பன்னிரண்டாம் திங்கள், இருபத்தைந்தாம் நாள் ஹைகூ நாற்பெருங் கவிஞர்களில் ஒருவராகிய பூசன் 68ஆம் வயதில் இறந்தார்.

ஹைகூவில் நவீனத் தன்மையை உருவாக்கியதில் பூசனுக்குத் தனிச்சிறப்பிடம் உண்டு. பாஷோவைவிடக்கூட, அவ்வகையில் ஆற்றல்மிக்கவர் என்கின்றனர். பூசன் தலைசிறந்த ஓவியராகவும் விளங்கினார். தான் மரணமடை வதற்கு ஒரு திங்கள் முன்பு, காளான் பறிப்பதற்காக மலைப்பக்கம் சென்றார் என்றும், திரும்பி வந்ததும் நோய்வாய்ப்பட்டார் என்றும் தெரிகிறது. 1783ஆம் ஆண்டின் இறுதித் திங்கள், இருபத்து நான்காம் நாள், தன் மாணவர் கெக்கியை (Gekkei) அழைத்து ஒரு தூரிகையைக் கொடுத்து எழுதிக் கொள்ளச் சொல்லி மூன்று கவிதைகளைச் சொன்னார்.

முதல் இரண்டு கவிதைகளில் இராப்பாடிப் பறவை இடம் பெற்றது. மூன்றாவது கவிதையில் பிளம் படிமம் கொண்டது. இப்படிமங்கள் இரண்டுமே குளிர்காலப் பின்பகுதியோடும் வசந்தத் தொடக்கத்தோடும் தொடர்புடையவை. பூசனின் தோட்டத்தில் பிளம், சூரிய உதயத்தில் வெளிச்சத்தில் வெண்மை மிளிரப் பூக்கத் தொடங்கிவிட்டது.

78

## கிபாஇ
## Kibai

My one wish
is to live in the capital
of none-action.

**எனதொரு விருப்பம் –**
**செயலின்மையின் தலைநகரில் நான்**
**வாழவேண்டும்.**

1788ஆம் ஆண்டு இரண்டாம் திங்கள், பன்னிரண்டாம் நாள் கிபாஇ தனது எழுபதாவது வயதில் இறந்தார்.

ஜப்பானிய ஹைகூவில் உள்ள Mui என்ற சொல்லுக்குத் தாவோ மெய்யியலில் செயலற்றிருத்தல் என்பது பொருள். இது சில பௌத்த நூல்களில் நிர்வாணம் என்பதைச் சுட்ட எடுத்தாளப்பட்டது. ஆயின் ஜென் பௌத்த நூல்களில் தாவோவியப் பொருண்மைக்கு நெருக்கமுள்ள நிலையிலேயே இச்சொல் காணப்படுகிறது.

செயல் அற்றிருத்தல் என்றால் ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருத்தல், எதுவுமே செய்யாமல் இருத்தல் என்பதன்று பொருள். மாறாக இதற்கு ஒரு பொருள் உண்டு அது இயற்கையான வளர்ச்சிக்கு இடையூறாக ஏதும் செய்யாமல் இருத்தல் என்பதுதான். சூரியகாந்தியின் வளர்ச்சி இயல்பாய் நிகழ்வது போன்ற செயல் என்பர்.

சும்மா இருப்பதே சுகம் என்று நம் தமிழ் வரியிலும் இப்படிப்பட்ட செயலின்மைதான் சுட்டப்படுகிறது.

## 79

### சுகபோ
### Shukabo

Is it me the ravan calls
from the world of shades
this frosty morning.

**இருண்ட உலகிலிருந்து**
**என்னையா காக்கை அழைக்கிறது**
**இந்தப் பனிபடர்ந்த காலையில்?**

1775ஆம் ஆண்டு 11ஆவது திங்கள், எட்டாம் நாள் தனது 58ஆம் வயதில் இறந்தார் சுகபோ.

காக்கை கரைந்தால் விருந்து வரும் என்று பொருள்படுத்தும் நம் தமிழர்கள், இறந்தவர்களைக் காக்கை வடிவத்தில் கண்டு பிண்டச்சோறு படைக்கும் வழக்கம் உடையவர்கள். மலையாள மக்களிடமும் இப்படிப்பட்ட நம்பிக்கை உண்டு. இந்தக் கவிதையில் மரண அழைப்பை, சுக்போவுக்குக் காக்கை வழங்குகிறது. இருண்ட உலகிலிருந்து கூப்பிடும் காக்கை நிறமும் அப்படித்தான் இருக்கிறது.

ஜப்பானிய மொழியில் இந்த ஹைகூவில் இடம் பெற்றுள்ள Meido என்ற சொல் இறந்தவர்கள் வாழும் உலகைக் குறிக்கிறது. Meido என்பதற்கு இருண்ட பூமி என்பதுதான் பொருள். இவ்வுலகத்திற்கும் மறு உலகத்திற்கும் இடையில் உள்ள எல்லை இக்கவிதையில் தெளி வற்றிருக்கிறது. மங்கலாய்த் தெரிகிறது.

80

## கியோஹகு
## Kyohaku

I am not worthy
of this crimson carpet
autumn mapple leaves.

**எனக்கென்ன தகுதி**
**இரத்தினக் கம்பள விரிப்பு**
**இலையுதிர் கால மேப்பிள் இலைகள்.**

கியோஹகு 1847ஆம் ஆண்டு. பத்தாம் மாதம் கடைசி நாள் மரணம் அடைந்தார். வயது 75.

இந்தக் கவிதையின் ஜப்பானிய மூலத்தில் உள்ள momiji என்பது இலையுதிர் பருவத்து இலைகளின் காட்சியைக் குறிக்கும் பொதுவான சொல்லாக இருப்பினும். முதன்மையாக மேபிள் இலைகளைச் சுட்டுவதாகவே கருதப்படும். இலையுதிர்கால இறுதியில் மேபிள் மரத்து இலைகள் செக்கச் சிவந்து மலைக் காடுகளில் நிறைந்திருக்கும். பார்த்தால் மலையே தீப்பற்றி எரிகிறதோ என்று தோன்றும்.

ஜப்பானியப் பழங்கவிதைகளில் மேபிள் இலைகளின் அடர்ந்த காட்சியைச் சிவப்புக் கம்பளத்தோடு ஒப்பிட்டுப் பேசும் ஒரு மரபு உண்டு. இலையுதிர்காலத்தில் மேபிள் இலைகள் தரைப் பரப்பெல்லாம் நிறைந்து. விரிக்கப்பட்ட சிவப்புக் கம்பளம் போல் காட்சியளிக்கிறது. அடுத்த உலகுக்குப் புறப்படும் கவிஞருக்குக் கவுரவம் அளிக்கும் வகையில் போடப்பட்ட இரத்தினக் கம்பள வரவேற்பாகத் தோன்றுகிறது. எனவே எனக்கென்ன தகுதி இருக்கிறது இதற்கு என்கிறார்.

இந்தக் கவிதை நம்முன் நடந்து வருவதற்கு நாம் நமக்குள் இரத்தினக் கம்பளத்தை விரித்துப் போடலாம். இதற்கு அவ்வளவு தகுதியிருக்கிறது.

## 81

### செய்யென்

### Seien

(குறிப்புகள் கிடைக்கவில்லை)

The skylark sings
making ripples in the clouds.

வானம்பாடி பாடுகிறது
மேகங்களில்
சிற்றலைகள் உண்டாக்கி...

மேகங்களை ஈர்த்து நெகிழ்வித்து அவற்றில் அலை
இழைகள் உண்டாகும்படி பாடுகிற வானம்பா
என்கிற விந்தைமிகும் கவித்துவப் புனை
நம்மைக் கவர்கிறது.

வானந்தான் பாடிற்றா? வான்நிலவு பாடிற்றா? என்
வானம்பாடியைப் பாடி மகிழ்ந்த புரட்சிக்கவிஞ
பாரதிதாசனை இங்கு நாம் நினைக்கிறோம்.

**82**

## யுகோ-நி
## Uko-Ni

(குறிப்புகள் கிடைக்கவில்லை)

If he were my son he should not
attend you this cold snowy night.

**அவன் மட்டும் என் மகனாக இருப்பின்**
**பனிபெய்யும் இக்குளிர் இரவில்**
**வரமாட்டான் உமக்குத் துணையாய்.**

யுகோ-நி பான்சோ என்னும் கவிஞனின் மனைவி. வேறு குறிப்புகள் இவரைப் பற்றிக் கிடைக்க வில்லை.

பனிபெய்யும் இரவு. ஒரு நாள். கணவன் பான்சோ ஹைகாய் கவிதை நிகழ்ச்சிக்குப் புறப்படுகிறார். தன்னிடத்தில் பணியாளனாக வேலை செய்யும். பன்னிரண்டு வயதுப் பையனையும் துணைக்கு அழைத்துச் செல்ல முற்பட்டார். அந்தச் சின்னஞ்சிறு மகனை இப்படி நடுக்கும் பனியில் தன் கணவர் அழைத்துச் செல்வதை. அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. யார் பெற்ற பிள்ளையோ என்று நினைக்காமல் அச்சிறுவன்மீது இரக்கமும் அன்பும் பெருக. சட்டென்று அந்தத் தருணத்தில் இந்தக் கவிதையை எழுதிக் கணவனிடம் நீட்டினார் யுகோ-நி. கவிதை. பான்சோவின் இதயத்தை உலுக்கிவிட்டது. 'அப்பா நீ இங்கேயே இரு' என்று சொல்லிவிட்டு அவர் மட்டும் ஹைஹாய் விருந்துக்குப் புறப்பட்டார்.

83

## பாஷோ

**Basho** (1644-1691)

Will you call on me in my loneliness
a paulownia leaf has fallen.

**என்னைக் காண வருவாயா என் தனிமையில்?**
**இலையொன்று விழுந்தது**
**பொலோனியாவிலிருந்து.**

ஆசான் பாஷோ தன் மாணவர் ரென்செட்சூவுக்கு எழுதிய கவிதைத் கடிதம் இது.

பொலோனியா இலை உதிர்வு, சீன, ஜப்பானி இலக்கியங்களில், இலையுதிர்காலத் தனிமையையு இருண்மையையும் குறிக்கும் குறியீடாகு மரபாகச் சொல்லப்படும் தொடர் 'ஒற்றை இ உதிர்வு உலகம் முழுமையும் இலையுதிர்கால வந்துவிட்டதைச் சொல்லும்' என்பதை நாம் இங்கு கருத்தில் கொள்ளலாம்.

என் தோட்டத்தில் ஒரு பொலோனியா இ உதிர்ந்துவிட்டது. தனிமை என்னை வதைக்கிறது தயவுசெய்து நீ என்னை வந்து பார்க்கமாட்டாய என் அன்பு நண்பனே! என்பதைத்தான் இந் ஹைகூவில் பாஷோ பதிவு செய்கிறார். இந்த கவிதையில் தன் பாசத்திற்குரிய மாணவன் மீ பாஷோவின் அன்பு பீரிட்டுப் பாய்வதை ஆய்வாளர்கள் வியந்து பாராட்டுவர் பாஷோவுக்கு மாணவர் பலர் இருப்பினும் கிக்காகூவும், ரென்செட்சுவும் மிகமிக செல்லமானவர்கள் என்று சொல்லலாம்.

பாஷோ இயற்கையின் இணையற்ற காதல என்பதோடு, மானுட நேயத்தை மதிப்பதிலு நம்புவதிலும் அதே அளவு உன்னத உள்ள கொண்டவர். தன் மாணவர்களைத் த பிள்ளைகளாகவே கருதியவர், அன்பு பாராட் வளர்த்தவர்.

## 84

## டேய்கி

**Taigi** (1709-1772)

So aloud the nightingale sings
as if it does not see its cage.

**அவ்வளவு உரக்கப் பாடுகிறது**
**இராப்பாடி பார்க்கவில்லைபோலும்**
**தானிருக்கும் கூடு.**

இனிய வசந்தகாலம், பசுமை கொலுவிருக்கப் பார்க்கும் இடம் எங்கும் பூத்துக் குலுங்கிப் புன்னகைக் காட்சி செய்கின்றது. செடி, கொடி, மரங்கள், காற்றுடன் கைகுலுக்கும் போதெல்லாம் நறுமணம் எங்கும் சிந்துகிறது. இந்தச் சூழலில், மனத்தை யார்தான் பறிகொடுக்காமல் இருக்க முடியும்? மயங்கிக் கிறங்காமல் யாரால்தான் இருக்க முடியும்? ஆனால் கூட்டில் அடைபட்டுக் கிடக்கிறதே இராப்பாடிப் பறவை. அதற்குத் தனது பறிபோன உரிமை வாழ்வு தெரியவில்லை. வசந்தத்தை அனுபவிக்க வானும் மண்ணும் வசமாகப் பறந்து திரியும் உரிமை இல்லை. ஏன் இப்படித் தனைமறந்து இராப்பாடி இப்படி உரக்கப் பாடுகிறது? அந்தப் பாடலைச் சுதந்தரமாய் இருப்பவர்கள் வீட்டில் கேட்டு மகிழலாம். கூண்டோடு கொண்டுபோன இடத்தில் கேட்டு மகிழலாம். ஆனால் இராப்பாடிக்கு? கால் துண்டிக்கப்பட்ட விளையாட்டு வீரன் முன், ஓட்டப்பந்தயம் நடந்தால் அவன் கைதட்டுவானா? கண்ணீர் கொட்டுவானா? ஐயோ இராப்பாடியே!

85

## சிய்ஃபூ-ஜோ

**Seifu-Jo** (1731-1814)

The Butterfly having grown old
it's soul plays in chrysanthemum.

**வளர்ந்து மூப்பு அடைந்ததால்**
**பட்டாம்பூச்சி ஆன்மா**
**விளையாடுகிறது கிறிசாந்தமத்தில்.**

கிறிசாந்தமப் பூவில் பசியாறிப் பறந்துபோய், அடுத்த பூவின் தேனுக்கு ஆசைப்படுவது ஒருவேளை வாலிபப் பட்டாம்பூச்சிகளின் வாழ்க்கையாக இருக்கலாம். ஆனால் வயது முதிர்ந்த பட்டாம்பூச்சி கிறிசாந்தமத்தின் அழகில் தனது ஆன்மாவை இழக்கிறது. அதன் அழகை வியக்கிறது.

பட்டாம்பூச்சி மகிழ்ச்சியின் குறியீடாகப் பயன்படுத்தப்படுகிறது. அது மட்டுமில்லை. அமரத்துவம் - மறுபிறப்பு ஆகிய மதத் தொடர்பான எண்ணங்களையும் தம் சிறகுகளில் சுமந்து வருகிறது. பட்டாம்பூச்சிக்கு அடுத்ததாக மின்மினிப் பூச்சியும், தும்பியும், ஜப்பானிய இலக்கியங்களிலும் ஜப்பானியர் வாழ்விலும் இடம் பெறுகின்றன.

86

## இசா

**Issa** (1763-1827)

The plum blossoms here
shall I steal it?
the moon says.

**பிளம் பூத்திருக்கிறது
திருடிக் கொள்ளட்டுமா?
நிலா கேட்கிறது.**

இசாவுக்குள்ள இயற்கை உறவு வியக்கத்தக்கது. பட்டாம்பூச்சிகள் ஒன்றை ஒன்று காதலிப்பதை வியந்தவர், மறுபிறவியில் தான் ஒரு பட்டாம்பூச்சியாகப் பிறக்க வேண்டும் என்று ஆசைப்பட்டவர் இசா.

இங்குப் பிளம் மரம் பூத்துக் குலுங்குவதை வானிலிருந்து பார்க்கிறது நிலா. பூவொன்றைப் பறித்துக் கொள்ள ஆசைதான். கேட்டால் பூமியில் யார் கொடுக்கப் போகிறார்கள்? எனவே திருடிக்கொள்ளட்டுமா? என்று கேட்கிறதாம். திருடிக் கொள்ள அனுமதி கேட்டால் அது எப்படித் திருட்டாகும்? கேட்டே கொடுக்காதவர்கள் திருடிக் கொள்ளட்டுமா என்றால், சும்மாவா இருப்பார்கள்?

பிளம் மலரின் அழகு மதியின் மதியை மயக்குகிறது இப்படி.

87

## கொதோ

**Kodo** (-1738)

(பிற குறிப்புகள் கிடைக்கவில்லை)

If the cuckoo were a flower
I would pluck a voice from off it.

**இந்தக் குயில் ஒரு பூவாக**
**இருக்குமாயின் அதிலிருந்து**
**குரல் ஒன்று பறித்துக் கொள்வேன்.**

இரவு நேரம் எங்கிருந்தோ குக்கூ குக்கூ என்று குயில் கூவுகிறது. இரவில் குயிலின் குரல் அரிது. எப்போதாவது கேட்கும். கவிஞர்கள் இரவெல்லாம் எழுந்து உட்கார்ந்து அக்குயிலோசை கேட்பார்கள்.

கொதோ என்ற ஹைகூ கவிஞன் குயில் அனுபவம் வியப்பானது. நேரடியாக இந்தக் கவிதையைப் படித்தவுடன் என்ன தோன்றுகிறது? குயில் கூவுகிறது. கவிஞன் கண்களைச் சுழலவிட்டுக் குயிலைப் பார்க்கத் துடிக்கிறான். ஆனால் அக்குயில் கண்ணில் படாமலே மறைந்துவிட்டது. இதில், இரவு கருமை, குயிலும் கருமை! பாட்டுத்தான் வெளிச்சம். கொதோ, நினைக்கிறான்: "இந்தக் குயிலின் பாடல் ஒரு பூவாக இருந்தால் அல்லது பூப்பூக்கும் செடியாக இருந்தால் கிளை ஒன்றைப் பறித்து என் தியானத்துக்குப் பயன்படுத்துவேனே. அது முடியாமற் போயிற்றே." தமிழ் மொழிபெயர்ப்பில் உள்ளபடி, குயிலே ஒரு பூவாக இருந்திருந்தால் ஒரு குரல் பறித்து வைத்துக் கொள்ளக் குறிக்கொள்ளலாம்.

**88**

## ரிய்யுஹோ

**Ryuco** (1660-1705)

What should I get angry about
the cherry flowers are their best.

**எதன்மீது நான்**
**கோபம் கொள்ள முடியும்?**
**இப்படிச் செர்ரி பூத்துக் குலுங்கினால்.**

மனிதனின் மூர்க்கத்தை ஒன்றுமில்லை என்று ஆக்கிவிடுகிற ஆற்றல் இயற்கையிடம்தான் இருக்கிறது. செர்ரி மலர்கள் கவிஞனைத் தன் வடிவத்தால், வண்ணத்தால், மணத்தால் முற்றிலுமாக ஆட்கொண்டுவிடுகின்றன. இயற்கையின் குணத்தில் இழைந்தவன் தன் பொல்லாக் குணம் ஒன்றை இழக்கிறான். யாரையும் வெகுளாமல், பகைக்காமல், விரட்டாமல் இருக்க வேண்டுமானால் - நாம் மலர்களின் மாணவர்களாகப் பாடம் கேட்க வேண்டும். செர்ரி நிலையாமையை உணர்த்தும் ஒரு குறியீடு என்பதால் முளைத்த சினம் சட்டென்று உதிர்ந்துவிடும் என்பதும் இந்த ஹைகூவின் அர்த்த அடுக்கில் படிந்துள்ளது.

89

## சிய்யோ-நி

**Chiyo-Ni** (1703-1775)

The glorious moon even birds
do not shut the doors of their roosts!

**அற்புத நிலா!**
**பறவைகளும் தம் கூடுகளின்**
**கதவு மூடவில்லை.**

புனைவியலின் உச்சமான கவிதைகளில் ஒன்று இது. நிலாப் பார்த்தல் - மலர் பார்த்தல் - எல்லாம் மனிதர்களுக்கு மட்டும்தானா?

பறவைகள் மரக்கிளைகளில் குடும்பத்தோடு வெள்ளி நிலாவின் கொள்ளை அழகில் மகிழ்ந்து கொண்டிருக்கின்றன. அதுவும் தம் கூடுகளின் கதவுகளை மூடாமல்.

மனிதன் மழை என்றாலும், காற்று என்றாலும், வெயில் என்றாலும் கதவை மூடி வைக்கிறான். சாளரத்தை இழுத்துச் சாத்துகிறான். 'அதோ அந்தப் பறவைபோல வாழவேண்டும்' என்று பாடுகிறோம், அந்தப் பறவையின் மனம் இல்லாமலே! எப்படி முடியும்?

**90**

## சோசெகி

**Soseki** (1867-1916)

Which leaves
will be the first to go?
only the wind knows.

**எந்த இலைகள்**
**முதலில் உதிர வேண்டும்?**
**காற்று மட்டுமே அறியும்..**

ஹைகூவின் புதிய தலைமுறையைச் சார்ந்தவர் என்று கருதப்படுபவர்களில் ஒருவர் சோசெகி.

மிக நுட்பமான நவீன ஹைகூக்களில் ஒன்று என்று கடந்த நூற்றாண்டில் பாராட்டப்பட்ட கவிதை இது.

இலை உதிர்கிறது
ஆனால் உதிர்வதை யார் முடிவு செய்வது?
இலையா? கிளையா?
மரமா? எது?

அல்லது இவை எல்லாம் கூட்டாக முடிவு செய்யுமா? மரத்திற்குத் தொடர்பில்லாத காற்றின் கையில்தான் அந்த முடிவு இருக்கிறது. அது உதிர்த்தால் உதிர வேண்டியதுதான்.

'மரம் சும்மா இருந்தாலும் காற்று அதைச் சும்மா இருக்கவிடாது' என்று புரட்சிகரமான சமுதாய எழுச்சியை நுட்பமாக மாவோ குறிப்பிடுவார்.

**91**

## ரிய்கான்

## Reikan

(குறிப்புகள் கிடைக்கவில்லை)

I would ask of their dreams in the flowers
But ah! butterflies have no voice.

**பூவில் கண்ட கனவுகள் என்ன?**
**கேட்பேன் ஆனால்**
**பட்டாம்பூச்சிகள் பேசுவதில்லையே!**

பட்டாம்பூச்சிகளுக்கு மட்டும் பாடத் தெரிந்திருந்தால் மனிதர்கள் அவற்றையும் கூண்டில் அடைத்திருப்பார்கள். சந்தையில் விற்றுச் சம்பாதித்திருப்பார்கள். நல்லவேளை, இனிய குரல் பட்டாம்பூச்சிகளுக்கு இல்லை. பட்டாம்பூச்சிகள் பூக்களின் இதயத்தில் படுத்து உறங்கும் காட்சி - ரிய்கானை அவற்றின் கனவுகள் வரை இழுத்துக் கொண்டுபோகிறது. என்ன கனவுகளாக இருக்கும் - வண்ணங்களின் கனவுகளான பட்டாம்பூச்சிகள் காண்பன? உறங்கும் பட்டாம் பூச்சிகளுக்கும் குரல் இல்லை. உறங்கத் தம் இதயத்தில் இடம் தந்த பூக்களுக்கும் குரல் இல்லை. இதைச் சொல்லக் கவிஞனுக்குக் குரல் இருந்தும் அவனால் கனவுகள் என்னவாக இருக்கும் என்று கண்டு சொல்ல முடியவில்லை!

## 92

### பாய்ஷிட்சு
**Baishitu** (1768-1852)

When the mosquito net is put up
the mosquitoes look lovely
flying about the moon beams.

**கொசுவலையைத் தூக்கிக் கட்டியதும்**
**நிலாக் கதிர்களில் பறந்தபடி**
**அழகாய் இருந்தன கொசுக்கள்.**

வாட்போர்க் கலையில் வல்லவராயிருந்த பாய்ஷிட்சு ஹைகூ ஆசானாகவும் விளங்கியவர்.

இரவில் கொசுக்கடிக்கு அஞ்சி வலை போட்டாயிற்று. ஆனால் நிலா வந்தபின் அதன் அழகின்பத்தில் ஆழ்ந்து மூழ்கக் கொசுவலை கூடத் தடைதான். கொசுவலையைச் சுருட்டி மேலே வைத்தாயிற்று. அப்புறம் நிலாவைக் கண்களில் மொண்டு மொண்டு பருக வேண்டியதுதானே!. பாய்ஹிட்சு நிலா இன்பத்தில் மூழ்கும்போதே அங்குமிங்கும் பறக்கிற கொசுக்களைப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. என்ன அழகு இந்தக் கொசுக்கள் என்று அவற்றையும் அனுபவிக்கிறார்.

எந்த நிலையிலும் இன்ப அனுபவம் தரும் ஒன்றாக யாரேனும் கொசுவைச் சொல்வார்களா? கவிஞன்தான் சொல்ல முடியும். நுண்புல உணர்வுக் கவிஞன் ஜான் டன் கொசுவைப்பற்றி ஒரு கவிதை எழுதியிருக்கிறான். காதலியிடம் சொல்கிறான் காதலன்.

'இது கொசுவல்ல
கொன்றுவிடாதே
இது நீயும் நானும்
இது நம் திருமணம் நடந்த
தேவாலயம்.'

கொசு காதலனையும் கடித்தது. காதலியையும் கடித்தது. இருவர் இரத்தமும் கொசுவில் கலந்தது. எனவே இருவர் ஒருவரான கதையாயிற்று. திருமணம் நடந்த தேவாலயமும் ஆய்விட்டது. காதலர்களுக்குக் கொசு கும்பிடத்தக்கதாயிற்று. கொல்லவா முடியும்?

93

## ஹசு
## Hasu

(குறிப்புகள் கிடைக்கவில்லை)

Ah! the insect seller makes me
hear the meloncholy autumn.

**ஆ! இந்தப் பூச்சி விற்பவர்
கேட்க வைக்கிறார் என்னை
இலையுதிர் பருவத் துயரம்.**

ஜப்பானில் டோக்கியோ போன்ற பெருநகரங்களில், வெட்டுக்கிளிகள், சில்வண்டுகள் மற்றும் பிற இலையுதிர் பருவப் பூச்சிகளைக் கலையழகு பொருந்திய கூண்டுகளில் அடைத்து இரவில் விற்பார்கள்.

சில பூச்சிகளின் குரலில் துயரச் சுதிகள் ததும்பும். கவிஞர்கள் அவற்றை இருண்ட இலையுதிர் பருவத்தின் குரல்கள் என்று கவிதைப்படுத்தினர். கூண்டில் அடைபட்ட பூச்சிகளின் குரல் இனிமையாக இருக்கலாம். அவற்றின் வாழ்வு? இலையுதிர் காலத்தின் இதயம் துக்கப்படுகிறது. கூண்டோடு இப்பூச்சிகளை வாங்கியவனுக்கு? விற்றவனுக்கு?

94

## ஒனிட்சுரா

**Onitsura** (1661-1738)

The cherry flowers having gone
Onjogi temple is quiet again.

**செர்ரி மலர்கள் போய்விட்டதால்**
**மறுபடியும் அமைதியாகிவிட்டது**
**ஒன்யோஜி கோயில்.**

ஜப்பானில் செர்ரி மலர்கள் கோயில் வளாகங்களில் வளர்க்கப்படுவது வழக்கம். செர்ரி மலர்கள் பூத்துக் குலுங்கும்போது, மக்கள், மலர்கள் பார்ப்பதற் கென்றும், வழிபாடு செய்வதற்கென்றும் கூட்டம் கூட்டமாகத் திரள்வார்கள். செர்ரி மலர்கள் பூப்பது நின்ற பின்னர், கோயில் வெறிச்சோடிக் கிடக்கிறது என்கிறார் கவிஞர் ஒனிட்சுரா. வழிபாட்டுக்கென்று வந்த கூட்டம் எப்படி இல்லாமல் போகும்? ஒருவேளை வழிபாடுகள் எல்லாம் அமைதியாக நடந்து கொண்டிருக்கலாம். ஆனால் ஆரவாரமான, ஆர்வம்மிக்க கூட்டம் செர்ரி மலர்கள் பார்க்கவே வருகின்றன என்பது நமக்குப் புரிகிறது.

ஒருவேளை மலர் பார்க்க வரும் மலர்கள் இல்லாமல் போனதால் கோயிலில் கூட்டம் இல்லாமல் வெறிச்சோடிக் கிடக்கிறதோ?

**95**

## இசா

**Issa** (1763-1827)

The old dog
is leading the way -
visiting family graves.

வயது முதிர்ந்த நாய்
வழிகாட்டி முன் செல்லும்
குடும்பக் கல்லறைகள்.

இசா என்னும் இயற்கைக் காதலன் சித்திரமாகத் தீட்டிய ஹைகூ இது. குடும்பக் கல்லறைகள். தாத்தா, பாட்டி, அப்பா, அம்மா, அத்தை, மாமா என்று எத்தனையோ பேர்களின் ஓய்விடம். பலருடைய மரணத்தின்போதும் இடுகாடு வரை போய்வந்த அனுபவம் வயது முதிர்ந்த இந்த நாய்க்கு. குடும்பத்து உறுப்பினர்கள் புதைக்கப்பட்ட இடத்திற்கு மறவாமல் செல்லும் மக்களோடு இந்த நாயும் செல்கிறது. உறவுகளின் உடம்புகளைப் புதைக்கக் கொண்டு செல்லும் சிலருக்கு வழி தெரியாமல்கூட இருக்கலாம். வழிகாட்டிக் கொண்டு முன்னே போகும் குடும்பத்து மூத்த நாய். நாய் இறந்தவர்களையும் மறப்பதில்லை. அவர்களைப் புதைத்த இடத்தையும் மறப்பதில்லை.

மவுனமான ஊர்வலத்தை நடத்திச் செல்லும் நாயோடு சேர்ந்து நாமும் துக்கம் அனுசரிக்கலாம்.

## 96

## அரிகிதா மொரிதகே

**Arkida Moritake** (1472-1549)

On the morning of New Year's day
I think even of the age of gods.

புத்தாண்டு முதல்நாள் புலர்ந்தபோது
கடவுளின் வயதுபற்றிக்கூட
எண்ணுகிறேன் நான்.

பாஷோவுக்கு முந்திய கவிஞர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் மொரிதகே, சோகன், சோகா, தீய்தோகு, தீயிஷ்ருசு, கிஜின் எனச் சிலர் உள்ளனர்.

புத்தாண்டு முதல் நாள் காலையில், வரலாற்றுக்கு முன்னைய காலத்துக் கடவுள்களை எண்ணிப் பார்க்கிறார் மொரிதகே. புத்தாண்டு முதல்நாள் மிகப் புனிதமானது. அதுவும் உயர்ந்த மதகுரு நிலையில் ஐசியில் (ISE) ஆலயங்களில் பணியாற்றியவர்க்கு மிக இயல்பானதுதான் இப்படி நினைப்பது. பாஷோ காலத்துக்கு ஹைகூ மாறும் ஒரு காலகட்டத்தை புலப்படுத்துவது இக்கவிதை என்கின்றனர் ஆய்வாளர்கள்.

இக்கவிதையில் உள்ள age என்கிற சொல் காலம் என்ற பொருளையும் தரும்; காலம் என்னும் தொகுப்புக்குள் அடங்கும் வயது என்ற பொருளையும் தரும். அவரவரும் புத்தாண்டு வரும்போது தங்கள் வயதை - தங்கள் குடும்பத்தில் உள்ளவர் வயதுகளை அல்லது நண்பர்கள் வயதை எண்ணிப் பார்க்க வாய்ப்புண்டு. கவிஞன்தான் கடவுளின் வயதுபற்றிக்கூட எண்ணிப் பார்ப்பான்.

**97**

## ஒஜகி ஹோசாய்

## Ozaki Hosai (1885-1926)

Angry with my wife
in the heat of the day
I walked out of the house.

**மனைவியோடு கோபம்**
**பகலின் வெப்பத்தில்**
**வீட்டைவிட்டு வெளியேறினேன்.**

நவீன ஹைகூ கவிஞர்கள் முக்கியமானவர்களில் ஒருவரான ஹோசாய் ஒரு முறைசாரா வாழ்வு முறை சார்ந்தவர். எதற்கும் கட்டுப்படாதவர். விருப்பம்போலக் குடிப்பார். விருப்பம் இருந்தால் வேலை செய்வார். இல்லாவிட்டால் எங்கேனும் அலைவார். ஜப்பானிய சமூகத்தோடும் அவரால் இணைந்து போக முடியவில்லை. மனைவியோடும் இனிய உறவு இல்லை. குழந்தைகள் இல்லை. சீனச் செவ்வியல் கவிஞர்கள் போல மனம் போன போக்கில் வாழ்ந்த ஒரு நாடோடி ஹைகூ ஆசான்.

மனைவியோடு வெகுளி மூண்டபோது வீட்டு வெப்பம் அளவு கடந்துவிட்டது. கொதிக்கும் வீதி வெப்பம் அவரை ஒன்றும் செய்யவில்லை போலும். வீட்டிலும் வீதியிலும் உள்ள வெப்ப அளவை விஞ்சியது அவர் இதய வெப்பம். பெருங்கவிஞர் ஷிகியைப் போலவே எலும்புருக்கி நோயால் இறந்தவர் ஹோசாய்.

## 98

## ஒஜகி ஹோசாய்

**Ozaki Hosai** (1885-1926)

Profoundly lovely
Just to see someone
I make my shadow move.

**ஆழ்ந்த தனிமை**
**யாரையேனும் பார்க்கத்தான்**
**என் நிழலை அசையச் செய்தேன்.**

ஹோசாய் ஜப்பானிலேயே எவரிடமும் ஒட்டாம
உறவு கொள்ளாமல் அலைந்து திரிந்தவர். 1923இ
கொரியாவின் தலைநகர் சியோலில் இருந்தபோது
தனிமையின் கொடுமையை ஒவ்வொரு வேளை
உணரத்தான் செய்தார்.

தன்னைத் தவிர யாரேனும் இம்மண்பரப்பி
இருப்பார்களா என்கிற ஐயமும், இருக்
மாட்டார்களா என்கிற தவிப்பும் ஹோசான
வதைக்கின்றன போலும்.

தனது உடம்பை அசைக்கிறார். தன் நிழ
அசைகிறது. ஓ! தனிமையில்லை. கூடவே இன்னு
ஒருவர் இருக்கிறார் என்கிற மனநிலை ஏற்படுகிற
ஹோசாய்க்கு. ஹோசாய் இப்படிப்பட்
தனிமையில் எழுதிய இன்னொரு கவிதை.

அப்படி ஒரு தனிமை
எதையேனும் பார்க்க
என்விரல்கள் ஐந்தை விரித்தேன்.

**99**

## ஓஜகி ஹோசாய்

**Ozaki Hosai** (1885-1926)

Spring time in the hills
Behind them, a column of smoke
has begun to rise.

**மலைகளில் வசந்த காலம்**
**மறுபக்கம், ஒரு புகைப் பத்தி**
**மேலெழத் தொடங்கிவிட்டது.**

ஓஜகி ஹோசாய் எழுதிய கடைசிக்குக் கவிதை. 7.8.1926 அன்று இறப்பதற்குச் சற்றுமுன் ஒரு காகிதத் துண்டில் எழுதப் பெற்றது. இது செவ்வியல், சீன இறப்புக் கவிதைக்கு ஓர் எடுத்துக்காட்டானது என்கின்றார் ஜேம்ஸ் கிர்கப்.

பள்ளிக் காலத்தில் தலைசிறந்த மாணவராக விளங்கியவர். டோக்கியா இம்பீரியல் பல்கலைக்கழகத்தில் சட்டம் பயின்றபோதும், மெய்யியலில், அதுவும் லாவோட்சுவின் போதனைகளில் நெஞ்சைப் பறிகொடுத்தவர் ஹோசாய். பட்டம் பெற்றபின் உணர்வு அடிப்படையில் ஏற்பட்டு அலைக்கழித்த ஏமாற்றமே - அவர் வாழ்வுச் சீர்குலைவுக்குக் காரணமாயிற்று.

ஹோசாயின் இந்த இறுதிக் கவிதையே அவருடைய கவிதைக் கோட்பாட்டை விளக்குவதாக உள்ளது என்கின்றனர் விமர்சகர்கள்.

மலையில் வசந்தப் பசுமை...
மறுபக்கம் மேலெழும் புகை...
என்ன புகை
எண்ணத்தை இயக்க அப்புகை பின்னாலேயே
தொடர்ந்து போக வேண்டும்.



## 100

### சீய்ஷி யமாகுச்சி
### **Seishi Yamaguchi** (1901-1994)

Chewing a plum
Sour taste making me feel
like a boy again.

**சவைத்துச் சாப்பிட**
**பிளம் புளிப்பில் மீண்டும்,**
**பிறந்தேன் சிறுவனாக.**

தற்கால ஹைகூவின் தந்தை சீய்ஷி யமாகுச்சி, 1945இல் எழுதிய கவிதை. ஹைகூவில் பாடுபொருள், பாடுமுறை எல்லாவற்றிலும் புதுமையைப் புகுத்திய யமாகுச்சியின் தேர்ந்தெடுக்கப்பட்ட 300 ஹைகூ கவிதைகள் ஒரு நூலாக வெளியிடப்பட்டுள்ளன.

பிளம் பழத்தைக் கடித்ததும், சப்பியதும் புளிப்பு உறைக்கிறது நாக்கில். இளம் பருவத்தில் எப்படிப் புளித்ததோ அப்படித்தான் புளித்தது இப்போதும். அந்தப் புளிப்புச் சுவை அவரைக் கடந்த காலத்திலிருந்த யமாகுச்சியை அவரிடம் கொண்டு வந்து சேர்த்தது.

வயதான பிறகு தெருவோரத்தில் அல்லது மலைச்சரிவில் இருக்கும் புளியமரத்தில் புளியங்காய் அடித்துத் தின்ன முடியுமா? அந்த வாழ்க்கை திரும்புமா? ஆனால் ஒன்று செய்யலாம். ஊர்ப்புறத்தில் பள்ளிக்கூடங்களின் முன் விற்கப்படும் ஒரு கமர்க்கட்டை வாங்கி வாயில் போட்டுக் கொண்டு பாருங்கள் - அது உங்கள் பாலப் பருவத்தை மீட்டுக் கொடுத்துவிடும்.



**கவிதை :**

1. தமிழன்பன் கவிதைகள் – 1970.
2. சிலிர்ப்புகள் (வசன கவிதைகள்) – 1970.
3. தோணி வருகிறது – 1973.
4. விடியல் விழுதுகள் – 1977.
5. தீவுகள் கரையேறுகின்றன – 1978.
6. காலத்திற்கு ஒருநாள் முந்தி – 1982.
7. அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம் – 1982.
8. பரணி பாடலாம் – 1982.
9. ஊமை வெயில் – 1984.
10. நிலா வரும் நேரம் – 1984.
11. சூரியப் பிறைகள் (ஹைகூ) – 1985.
12. திரும்பி வந்த தேர்வலம் – 1985.
13. கருவறையிலிருந்து ஒரு குரல் – 1985.
14. நாமிருக்கும் நாடு – 1989.
15. ஊர் சுற்றி வந்த ஓசை – 1989.
16. குடை ராட்டினம் (குழந்தை இலக்கியம்) – 1990.
17. கிழக்குச் சாளரம் – 1991.
18. என் வீட்டு எதிரே ஓர் எருக்கஞ்செடி – 1995.
19. உன் வீட்டிற்கு நான் வந்திருந்தேன்.... வால்ட் விட்மன்! (பயணக் கவிதைகள்) – 1996.
20. நடைமறந்த நதியும் திசைமாறிய ஓடையும் – 1997.
21. பனி பெய்யும் பகல் – 1998.
22. மின்மினிக்காடு – 2000.
23. வணக்கம் வள்ளுவ! – 2000.
24. ஒரு வண்டி சென்ரியு – 2001.
25. தமிழோவியம் – 2002.
26. வார்த்தைகள் கேட்ட வரம் – 2002.
27. சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்கள் – 2002.
28. இரவுப் பாடகன் – 2003.
29. மின்னல் உறங்கும்போது – 2004.
30. கனாக் காணும் வினாக்கள் – 2004.
31. இவர்களோடும் இவற்றோடும் – 2004.
32. கவின் குறுநூறு – 2005.

33. கதவைத் தட்டிய பழைய காதலி - 2005.

34. மூன்று பெயர்களும் என் முகவரிப் புத்தகமும் - 2006.

35. அன்னை மடியே உன்னை மறவேன் (கவிஞர் பிறந்த ஊராகிய சென்னிமலை பற்றி எழுதிய கவிதைகளின் தொகுப்பு).

36. இடுகுறிப் பெயரில்லை இஸ்லாம் - 2008.

37. ஓலைச் சுவடியும் குறுந்தகடும் - 2008.

38. சொல்ல வந்தது - 2008.

39. என்னருமை ஈழமே! - 2009.

40. கொடி காத்தகுமரன் - வில்லுப்பாட்டு - 1964.

41. கதை முடியவில்லை - 2011.

42. கனவின் சில பக்கங்கள் - 2011.

43. பாப்லோ நெருதாவின் கவிதைகள் - தமிழாக்கம் - 2011.

- **உரைநடை :**

1. நெஞ்சின் நிழல் - புதினம் - 1965.
2. தாயின் மணிக்கொடி - 1966.
3. கவிபாடிய காவலர்கள் - 1967.
4. பாரத ரத்னா லால்பகதூர் - 1968.
5. என்னைக் கவர்ந்த பெருமானார் - 1986.
6. தனிப்பாடல் திரட்டு - ஓர் ஆய்வு - (முனைவர் பட்ட ஆய்வேடு) - 1987.
7. சிகரங்கள் மேல் விரியும் சிறகுகள் - கட்டுரைகள் - 1988.
8. கவிதைச் சிந்தனைகள் - கட்டுரைகள் - 1990.
9. இலக்கியப் பயன் - 1992.
10. புரட்சிக்கவிஞர் கவிதைகளில் தமிழ் - தமிழன் - தமிழ்நாடு - (சென்னைப் பல்கலைக்கழகத்தில் - 1994 ஏப்ரலில் நிகழ்த்திய பாரதிதாசன் அறக்கட்டளைப் பொழிவுகள்).
11. ஒரு மழை நாளில் - சிறுகதைகள் - 1995.
12. அணைக்கவா என்ற அமெரிக்கா - பயண இலக்கியம் - 1998.
13. பாரதிதாசனோடு பத்து ஆண்டுகள் - கட்டுரைகள் - 2000.
14. கலையா! கைவினையா! - கட்டுரைகள் - 2001.
15. கண்மணிக்குச் சில கதைகள் - சிறுவர் இலக்கியம் - 2001.
16. மதிப்பீடுகள் - 2002.
17. ஈர நெருப்பு - நாடகங்கள் - 2002.
18. தேம்சு நதியில் தேன்தமிழ் அலைகள் - 2006.
19. பாப்லோ நெருதா பார்வையில் இந்தியா - 2007.
20. கணைகளும் கனிகளும் - 2010.
21. கண்கள் கடந்த காகித வீதிகள் - 2010.



வாழ்க்கை
ஒரு பட்டாம்பூச்சிபோல
அது என்னவாயிருந்த போதும்.

இது, சுவாங் சூயைக்
(369-289 B.C) குறிப்பது
என்பர். அவர் சீனத் தாவோ
ஞானி. பட்டாம்பூச்சியாகத்
தன்னைக் கனவில் கண்டவர்.
விழித்தபோது, தன்னை
மனிதனாகக் கண்ட
பட்டாம்பூச்சியோ தானென்று
அதிசயித்தவர் (குழம்பியவர்).
வாழ்க்கை ஒரு
பட்டாம்பூச்சியாகி விட்டால்
அது எத்தகையதாக
இருந்தாலும் வண்ணம்
உண்டு! அழகுண்டு!
பறந்து திரியும்
பட்டுச் சிறகுகள்
உண்டு! போதாவா?
அப்புறம் என்ன?
வாழ்க்கை அப்படி இல்லை,
இப்படி இல்லை
என்ற புலம்பல்?